உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.


| தொகுதி 23 | தாது௵ கார்த்திகைமீ ௧௨ 1936௵ நவம்பர்மீ 16௳ | பகுதி 5 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்

அறிவாகி யானந்த மயமாய் என்றும்
அழியாத நிலையாகி யாதின் பாலு
பிரியாமல் தண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவே வேண்டின்
நெறியாகக் கூறுவன்கேள் எந்த நாளும்
நிர்க்குண நிற்கு உளம்வாய்த்து நீடுவாழ்க
செறிவான அறியாமை யெல்லாம் நீங்கச்
சிற்சுகம்பெற் றிடுகபந்தந் தீர்க வென்றே. (1)

பந்தமறு மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை யருளி யந்தப் பண்புக் கேதான்
சிந்தையில்லை நானென் னும் பான்மை யில்லை
தேசமில்லை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிறிது மில்லை
சொல்லுமில்லை யிராப்பகலாந் தோற்ற மில்லை
அந்தமில்லை யாதியில்லை நடுவு மில்லை
யகமுமில்லை புறமுமில்லை யனைத்து மில்லை. (2)

கண்டேன் நினதுஅருள் அவ்வருளாய்நின்று காண்பதெல்லாம்
உண்டே யதுவுநின தாக்கினேன் உவட்டாத இன்பம்
மொண்டே யருந்தியினைப் பாறினேன்நல்ல முத்திபெற்றுக்
கொண்டேன் பராபரமே யெனக்கேதுங் குறைவில்லையே. (3)

வெம்பந்தந் தீர்த்துஉலகாள் வேந்தன் திருஞான
சம்பந் தனையருளாற் சாருநாள் எந்நாளோ. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால், இறைவனை யடையவேண்டுமானால், நிட்களத் தியானஞ் செய்ய வேண்டு மென்கிறார்.

(இ-ள்.) அறிவுப் பிழம்பாகி, ஆனந்தமே உருவாகி, நித்தியத்வ முடைய தாகி, எப் பொருளிடத்திலும் விட்டு நீங்காமல், குளிர்ந்த கருணையே உறைவிடமான விழுப் பொருளாந் தலைவனை யடைய வேண்டுமானால், சன்மார்க்க முறையில் கூறுகிறேன்; கேட்பாயாக. எக் காலத்தும் குணாகிதமான அப் பரம் பொருள் உனக்கு மனதில் பொருந்தப் பெற்று நீண்ட நாள் வாழ்வாயாக; மிகுந்த அஞ்ஞான மெல்லாம் ஒழிய அறிவானந்த இன்பத்தைப் பெறுவாயாக; மும்மல பாசங்கள் விட்டொழிக என்றவாறு.

வெளிமுகமாக, சகளத்தியானஞ் செல்வது போலவே, உள்முகமாகவும் நிட்களத் தியானஞ் செய்து வருவது கடவுளை யடைவதற்கு அத்தியாவசிய மென்பார், "எந் நாளும் நிர்க்குண நிற்கு உளம் வாய்த்து நீடுவாழ்க" என்றும் அந் நிட்களத்தியானஞ் செய்து வருவதன் வாயிலாகத்தான் மலபந்தம் நீங்கிக் கடவுள் தரிசனங் கிடைக்கு மென்பார், "செறிவான அறியாமை நீங்க சிற்சுகம் பெற்றிடுக; பந்தந்தீர்க" என்றும் கூறினார்.

2. இதனால், பந்தமற்ற மெய்ஞ்ஞான மோன நிலையில், கடவுளுக்கு அன்னியமாக ஒன்று மில்லை என்கிறார்.

(இ-ள்.) மலபந்த நீக்கத்துக்குக் காரணமான உண்மை யறிவாகிய மௌன நிலையை அருள் புரிந்து, அந் நிலைக்கு மனமில்லை, நான் என்னுந் தற்போத முனைப்பு இல்லை, நாடு இல்லை, காலமில்லை திசையில்லை, பாந்தவ்யமில்லை, பிரிவில்லை, இவைகளுக்கு வேறான தன்மையுமில்லை, பேச்சுமில்லை, இரவு பகல் என்ற காட்சியில்லை, முடிவில்லை, முதலில்லை, இடைக்காலமுமில்லை, உள்ளுமில்லை, வெளியுமில்லை, எல்லாமுமில்லை. (எ-று.)

மலபந்த நீக்கத்தில் ஞானகுரு மெய்ஞ்ஞான மௌன நிலையைப் போதித்ததும், அந் நிலையில் மாணவனுக்கு எல்லாம் கடவுளன்றி வேறில்லை என்னும் உண்மை வெளிப்படுகிறது என்பதை, "சிந்தையில்லை.................. அனைத்துமில்லை" என்ற அடிகளில் நன்கு வெளிப்படுத்துகிறார்.

3. இதனால், சீவன் முக்த நிலையை அடைந்த பிறகு, யாதொரு குறைவுமில்லை என்பதை விளக்குகிறார்.

(இ-ள்.) பராபரமே! உனது திருவருளைத் தரிசித்தேன்; அத் திருவருள் வழி நின்று காண்பவை யெல்லாம் இருக்கின்றனவே; அக் காணுந் தன்மையையும் உன்னுடையதாக ஒப்படைத்து விட்டேன்; தெவிட்டாத இன்பத்தை முகந்து அருந்திக் களைப்பாற்றிக் கொண்டேன்; சிறந்த ஜீவன் முக்த நிலையை யடைந்து விட்டேன்; இனி, எனக்கு எக் குறையுமில்லை. (எ-று.)

4. இதனால், சைவசமயாசாரியனாகிய திருஞான சம்பந்தனை அடையும் நெறியைத் தெரிவிக்கிறார்.

(இ-ள்.) கொடிய மும்மல பாசத்தை யறுத்தெறிந்து, சிவனருளால் உலக மக்களை யாட்கொண்டருளும் மன்னனாகிய திருஞான சம்பந்தப் பெருமானைத் திருவருள் துணை கொண்டு அடையும் நாள் எந்நாளோ! (எ-று.)




# இந்து—முஸ்லீம் போராட்டம்





நம் தாய்நாடாகிய இந்தியாவில் பல பிரிவினரான மக்கள் இருந்து வாழ்ந்து வருகின்றனர். பல விதமான சமூகத்தினர்—சாதியினர் இந்நாட்டில் இருந்து வந்தாலும், இந்து சமூகத்தினரும், முஸ்லீம் சமூகத்தினருமே மற்ற சமூகத்தினரைக் காட்டிலும், பெரும்பான்மையோராக வதிந்து வருகின்றனர். மேலும், இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இந்தியாவே தாய் நாடாகும். எனவே, இவ்விரு பெரும் சமூகத்தாரும் சகோதரப் பான்மையோடு ஒற்றுமைப்பட்டு ஒத்துழைக்க வேண்டியது எத்துணை அத்தியாவசியமென்று நாம் எடுத்துக்கூற வேண்டியதில்லை. இவ்விரு சமூகத்தாரின் ஒற்றுமையையும், வேற்றுமையையும் பொறுத்தே இந்தியாவின் முன்னேற்றமும், பிற்போக்கும் இருக்கின்றன. இந்துக்களின் பரஸ்பர ஒத்துழைப்பின்றி, முஸ்லீம்களும், முஸ்லீம்களின் நல்லெண்ணமும் ஆதரவுமின்றி இந்துக்களும் இங்கு வாழ முடியாது.

பண்டைக்கால இந்தியாவில் வாழ்ந்திருந்த இந்துக்களும், முஸ்லீம்களும் இவ்வுண்மையை நன்குணர்ந்திருந்தனரெனத் தெரிகிறது. ஏனென்றால், இவ்விரு சமூகத்தாரும் யாதொரு விகற்பமுமின்றிச் சகோதர பாவத்தோடு ஒன்றுபட்டு வாழ்ந்து வந்தனர். மொழியும், சமயமும் இவ்விரு சமூகத்தாரையும் வேறுபடுத்திக் காட்டுவதாக இருந்தாலும், அவர்களது மனவொற்றுமை இவைகளால் கெடுவதாக இல்லை.

ஆகையால் இவ் விரு சமூகத்திலுள்ள அறிஞர்களும், பெரியார்களும் வெளி வேற்றுமையில் உள்ளொற்றுமையைக் கண்டு ஒரு தாய்

வயிற்றில் பிறந்த சகோதரர்கள் போல் ஒழுகி வந்தனர். இடைப் பட்ட காலத்திலும், இந்து மன்னர்கள் இந்தியாவை யாண்டபோதும் முகம்மதிய அரசர்கள் ஆட்சி புரிந்த சமயத்தும் இரு சமூகத்தாரை யும் சமாசமாகவே நடத்தி வந்தனர். ஏதோ இரண்டொரு முகம் மதிய அரசர்கள் தான் மதத்துவேஷத்தையும், வகுப்பு வேற் றுமை யுணர்ச்சியையும் கிளப்பி விட்டனர். இதனால் இந்து முஸ்லீம்க ளிடையே சகோதர பாவம் மாறி வேற்றுமை யுணர்ச்சி அரும்பி மெல்ல மெல்ல வளர்ந்து வரலாயிற்று. அத்துடன் அன் னிய ராட்சி வந்து சேர்ந்து இவ் விரு சமூகத்தா ரிடையேயும் நிரந்தர மான பிளவை யுண்டு பண்ணி விட்டது.

இவ்விதம், இந்து முஸ்லிம்க ளிடையே வேரூன்றி விட்ட வேற் றுமை யுணர்ச்சியைப் போக்க, காந்தி சகாப்தத்தில் கிலாபத் இயக்கம் தோன்றிப் பெரிதும் பாடுபட்டது. முக்கியமாக, மகாத்மாகாந்தி, முகம்மதலி, சௌகத் அலி முதலிய இந்து முஸ்லீம் தலைவர்கள் இவ் விரு சமூக ஒற்றுமைக்காக மேற்படி இயக்க வாயிலாகப் பெரிதும் பாடுபட்டார்கள். அவர்களது பேருழைப்பின் பயனாக, உண்மையி லேயே இந்து முஸ்லிம்க ளிடையே ஒற்றுமையும், சகோதர பாவமும் நிலவியது. இதைக் கண்டு, இந்தியா முன்னேற்ற மடைந்து விடும்; கூடிய சீக்கிரம் அன்னிய ராட்சியி னின்றும் விடுதலை பெற்று விடும் என்று தேச நலத்தில் பெரிதும் கருத்துடைய தலைவர்கள் கருதிச் சந் தோஷித்தனர். ஆனால், அவர்களது மகிழ்ச்சி நீடித்து நிற்க வில்லை.

ஆகவே, பிரித்தாளுந் தந்திரத்தில் பேர்போன பிரிட்டிஷ் சர்க் கார் ஆசை வார்த்தைகளில் இரு சமூகத்திலும் முக்கியஸ்தர்களாயுள்ள வர்கள் மயங்கி விட்டனர். ஒவ்வொரு வகுப்புத் தலைவர்களுக்கும் சுயநலம் முனைந்து நிற்கவே, அவர்கள் பொறாமைப் பேய்க்கு—விரோத பாவத்துக்கு—இரையாயினர். ஆகவே, மறுபடியும், இந்துமுஸ்லீம் களிடையே நிலவி யிருந்த ஒற்றுமை உருக்குலைந்தது. பம்பாய், கல் கத்தா, கான்பூர், டெல்லி, காரச்சி முதலிய இடங்களில் அடிக்கடி பெரிய பெரிய கலகங்கள் நிகழ்ந்தன. அக்கலகங்களில், இந்து முஸ் லீம்களில் நூற்றுக்கணக்கான பேர் உயிர் இழந்தனர்; பலர் காய மடைந்தனர். இக்கலகங்களுக்கு மதவெறியே முக்கிய காரணமாகக் கூறப்பட்டது. பல வருஷங்களாக, காங்கிரஸ் மகாசபையும் தேசியத் தலைவர்களும் முயன்று இந்து முஸ்லீம்க ளிடை நிலவச்செய்த ஒற் றுமை இக்கலகங்களால் அநியாயமாக நிலகுலைய லாயிற்று. எங்கும் வேற்றுமை யுணர்ச்சியே பரவி வருகிறது. சில குறிப்பிட்ட மாகா ணங்களில் இந்துக்களைக் கண்டால் முஸ்லீம்களுக்கு ஆகவில்லை; முஸ் லீம்களைக் கண்டால் இந்துக்களுக்குப் பிடிக்கவில்லை. இரு திறத்தா ரும் தாங்கள் ஒரே நாட்டில் பிறந்து வளர்ந்து வாழ்ந்து வரும் சகோ தரர்கள் என்பதை அறவே மறந்து விட்டனர்.

சமீபத்தில் பம்பாயில் மீண்டும் இந்துமுஸ்லீம் கலகம் ஏற்பட்டிருக்கிறது. இதற்கு முன் பம்பாயில் இருமுறை இந்து முஸ்லீம்களிடையே பெரிய கலகங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அவற்றிற் காயினும் காரணங்கள் சிறிது பலமா யிருந்தன என்று சொல்லலாம். ஆனால், இச்சமயம் நிகழ்ந்து வரும் கலகத்துக்கோ காரணம் மிக அற்பமான தாகும்.

சென்ற 1928-ம் வருடத்தில் நகர அமைப்பு சீர்திருத்தத்துக்காக பம்பாய் நகர அபிவிருத்திக் கழகத்தார் (Bombay Improvement Trusts) என்னும் சர்க்கார் ஸ்தாபனம் திட்டமொன்று வகுத்து வேலை செய்தது. இந்த அபிவிருத்திக் கழகத்தின் முக்கியவேலை தெருப் பாதைகளை விசாலமாக்குதல், வீதி யொழுங்கு அமைப்புகளைச் சீர்திருத்தி நகரத்தை அழகும், சுகாதாரமும் உடையதாகச் செய்தல் முதலியனவே யாகும். அத் திட்டப்படி நகரத் தெருப்பாதைகளைப் பம்பாய் நகர அபிவிருத்திக் கழகத்தார் சீர்திருத்தி வருகையில், அந்நகரில் ஒரு பாகத்திலுள்ள பைகுல்லா என்னு மிடத்தில் இருந்த மாருதி கோயில் குறுக்கிட்டது. அம் மாருதி கோயிலோடு பஜனை மண்டபமொன்றும் இருந்தது. நகர அபிவிருத்தி வேலைத்திட்டப்படி அக் கோயிலும் பஜனை மண்டபமும் இருந்த தெருப்பாதையை விசாலமாக்க வேண்டுமானால், கோயிலும், பஜனை மண்டபமும் சேர்ந்த கட்டிடத்தின் ஒரு பாகத்தைத் தகர்த்து அப்புறப்படுத்த வேண்டியது அவசியமா யிருந்தது. எனவே, அதன்படி செய்யக் கருதிய நகர அபிவிருத்திக் கழகத்தார் அதற்கு மேற்படி மாருதி கோயிலுக்கும், பஜனை மண்டபத்துக்கும் உரியவர்களான தர்மகர்த்தர்களின் அநுமதி பெற்றனர். இவ்விதம் செய்வதனால் தங்களுக்கு ஏற்படும் நஷ்டத்துக்கு ஈடுசெய்ய வேண்டுமென்று கோயில் தர்மகர்த்தர்கள் கேட்டுக்கொள்ளவே, நகர அபிவிருத்திக் கழகத்தார் அவ்வாறு செய்து தருவதாக ஒப்புக்கொண்டு அத் தெருப்பாதையைச் செப்பஞ் செய்தனர். பிறகு, நகர அபிவிருத்திக் கழகத்தார் தாங்கள் கோயி லதிகாரிகளிடம் வாக்குறுதி கொடுத்த வண்ணம், கோயிலுக்குச் சற்று உட்புறமாக, பஜனை மண்டபத்தையும், மாருதி கோயிலை யடுத்தாற்போல் பின்புறமுள்ள மசூதியில் தினந்தோறும் நடக்கும் கடவுள் தொழுகைக்குச் சிறிதும் இடைஞ்சல் இல்லாதிருக்க வேண்டி நடுவே ஒரு சுவரையுங் கட்டித்தரும் பொறுப்பைப் பம்பாய் நகரசபையாரிடம் ஒப்படைத்தனர்.

பம்பாய் நகரசபையார் ஏறக்குறைய எட்டு வருஷங்களுக்குப் பிறகு, இப்போது பஜனை மண்டபத்தைக் கட்ட முற்பட்டனர். இதைக் கண்ட பக்கத்து மசூதிக்குரியவர்களான முஸ்லீம் சகோதரர்கள் ஆட்சேபித்தனர். அவர்கள் இவ்விதம் ஆட்சேபிப்பதற்குச் சிறிதும் இடமில்லை; நியாயமுமில்லை. ஏனென்றால் பைகுல்லாவிலுள்ள மாருதி கோ

யிலோ, அதைச் சேர்ந்த பஜனை மண்டபமோ இப்போது புதிதாகக் கட்டப்படுவதல்ல; ஏற்கனவே, பல வருஷங்களாக மேற்படி மசூதிக் கருகாமையிலேயே இருந்து வந்திருக்கின்றன. அக் கோயிலில் உற்சவமும், பஜனையும் காலா காலங்களில் கிரமமாக நடந்து வந்திருக்கின்றன. இத்தனை வருஷங்களாக இக் கோயிலாலும், பஜனை மண்டபத்தாலும் இம் மசூதியில் நடக்கும் தொழுகைக்கு ஏற்படாத இடையூறு இப்போது உண்டாகப் போவதில்லை. முன்னே இருந்த பஜனை மண்டபத்துக்கும், இச் சமயம் கட்டப்படும் பஜனை மண்டபத்துக்கும் வெகு தூரமில்லை. ஆகவே, இதுவரை ஏற்படாத ஆட்சேபம் இப்போது ஏற்படுவதென்றால், இது வீண் விதண்டா வாதத்துக்கு இடமுண்டாகிறதல்லவா! இதையே தான் பம்பாய் நகரசபையார் முஸ்லீம்களின் ஆட்சேபத்துக்குப் பதிலாகச் சொன்னார்கள். முஸ்லீம்கள் அச் சமாதானத்தை ஏற்றுக் கொள்ளாது, மேலும் வீண் கிளர்ச்சி செய்யவே, பம்பாய் நகரசபையார் அதைப் பொருட் படுத்தாது, தங்கள் கடனை ஆற்ற முற்பட்டனர். முஸ்லீம்கள் கோர்ட்டில் இது சம்பந்தமாக வழக்குத் தொடுத்தனர். அதிலும் நகரசபை தீர்மானத்துக்குச் சாதகமாகவே தீர்ப்பளிக்கப்பட்டது. ஆகவே, நகரசபையார் பஜனை மண்டப வேலையை மீண்டுந் தொடர்ந்து செய்தனர். முஸ்லீம் சகோதரர்களோ தங்கள் கட்சி பல வகையிலும் வெற்றி பெறாது போகவே, ஆத்திரமும், கோபமுங் கொண்டனர். பலாத்கார முறையை அவர்கள் தாராளமாகக் கையாளலாயினர். முஸ்லீம்கள் பலாத்கார முறையைக் கைக்கொண்டு அடிதடியி லிறங்கவே, இந்துக்களும் பதிலுக்குப் பதில் பழிவாங்கத் தீர்மானித்து விட்டனர். இருபக்கத்திலும் கூட்டஞ் சேர்ந்தது. ஆரம்பத்தில் சிறிதாகத் தொடங்கிய கலகம் போகப் போக மிகப் பெரிதாகப் போய் விபரீதமான நிலைமை யடைந்து விட்டது. இக் கலகத்தில் கற்களும், சோடாப் புட்டிகளும் தாராளமாக உபயோகப்பட்டன. தடியடி, கத்திக் குத்து முதலியன தங்கு தடையின்றி நடந்தன. கட்டிடங்களுக்குத் தீயிடுதல், கொள்ளை யடித்தல் சகஜமாக நடந்தன. இக் கலகத்தைத் தடுக்க வந்த போலீஸாரையும் கலகக்காரர்கள் துணிகரமாகத் தாக்கினர். பம்பாய் நகரமே அல்லோல கல்லோலப்பட்டது. இக் கலகத்தில் இரு சாராரிலும் பலர் உயி ரிழந்தனர்; நூற்றுக் கணக்கான பேர் படுகாய மடைந்தனர். இக் கலகம் நான்கு நாட்களுக்கு மேல் தொடர்ந்து நடந்தது.

இப்பயங்கர நிலைமையைக் கண்டு வியாபாரிகள் கடைகளை மூடினர். வழிப்போக்கர்கள் தெருக்களில் போகப் பயந்தனர். நகர மக்களில் பலர் இக்கலகத்தால் இன்னும் என்னென்ன நேருமோ எனப் பெரும்பீதி கொண்டு நகரை விட்டு வெளியேறினர்.

இச்சம்பவம் சம்பந்தப்பட்ட விஷயத்தில் சர்க்கார் முன்

னெச்சரிக்கையாக நடக்கத் தவறிவிட்டன வென்றே கூற வேண்டும். ஏனென்றால், சர்க்காருக்கு இவ்வித கலகம் நேரும் என்பது சில நாட்களுக்கு முன்பே தெரியும். ஆகவே, அவர்கள் இக்கலகம் வரவொட்டாதபடி தடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாஞ் செய்திருக்கலாம். கலகம் முற்றிய பிறகு நடத்திய இராணுவ அமுலை முன்னதாகவே செய்திருந்தால் இவ்வளவு தூரம் உயிர்ச்சேதமும், பொருட் சேதமும் ஏற்பட்டிருக்காது. சிறிது காலத்துக்குமுன் இதுபோன்றே ஷாஹீத்கஞ்ச் என்னும் இடத்தில் ஏற்பட்ட அமளியி லுண்டான அநுபவம் சர்க்காருக்கு முன்னெச்சரிக்கையை யுண்டுபண்ணி யிருக்கவேண்டும். கலகம் முற்றிய பிறகு, போலீஸார் தலையிட்டும் குழப்பத்தைச் சாமானியமாய் அடக்க முடியாமற் போய்விட்டது. பலமுறை கலகக்காரர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகஞ் செய்ய வேண்டியதாயிற்று. இதில் கலகக்காரர்களேயன்றி நிரபராதிகளும் உயிரிழக்க வேண்டி நேரிட்டது. ஊரடங்கும் உத்தரவும் விதிக்கப்பட்டது. வெள்ளம் வந்தபின் அணை போடுவதில் என்ன பயன்?

சாந்த நோக்கமும், விரிந்த மனப்பான்மையு முடைய பிரமுகர்களின்-அதாவது இரு சமூகத் தலைவர்களின்—பெரு முயற்சியால்—அவர்கள் செய்துகொண்ட சமரச ஒப்பந்தத்தால்-கலகம் ஒருவாறு நிறுத்தப்பட்டது. மீண்டும் மண்டப வேலையும் ஆரம்பமாகி நடக்கலாயிற்று. ஊரடங்கும் உத்தரவு மட்டும் அமுலில் இருந்து வந்தது.

இவ்விதம் ஒருவாரம் பம்பாய் நகரம் அமைதியா யிருந்து வந்தது. கலகம் அடங்கிவிட்டது என்று நம்பி நாம் சந்தோஷ மடைந்தோம். ஆனால், அது அற்ப மகிழ்ச்சியாகப் போய்விட்டது. மீண்டும் கலகம் ஆரம்பமாய்விட்டது. ஊரடங்கும் உத்தரவு அமுலி லிருந்தும் பயனில்லை. நவம்பர் மாதம் பத்தாந் தேதி பம்பாயில் இரு இடங்களில் பலத்த கலகம் நடந்தது. இதில் நான்குபேர் கொல்லப்பட்டனர். 40 பேர் காயமுற்றனர். இந்துக்களுக்கு முக்கிய விழாவான தீபாவளி சமயத்தில் இவ்விதம் கலகம் நடந்ததால், வியாபாரிகளும், பொது மக்களும் பெரிதும் பாதிக்கப்பட்டனர். உடனே கடுமையான நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று வியாபாரிகள் தந்திவாயிலாகக் கவர்னருக்குத் தெரிவித்திருக்கின்றனர். போலீஸ் கமிஷனர் கலகத்துக்குக் காரணமாயிருக்கும் விஷமிகளைக் கைது செய்யும்படி உத்தரவிட் டிருக்கிறார். சர்க்கார் இக்கலகத்தை யடக்கும் விஷயத்தில் மிகவுஞ் சிரத்தை காட்டி இன்னும் தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு பழையபடி அமைதியான நிலைமையை ஏற்படுத்த வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

ஓம் தத் ஸத்.

# திருவிளக்குத் திருவிழா.

—(0)—

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

"சோதியே! சுடரே! சூழ் ஒளி விளக்கே!"—என்று அருட் பெருஞ் சோதியாம் ஆண்டவனைப் போற்றி நின்றார் ஒரு அன்பர். "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்—சீரார் சுடர்கள் இரண்டாய்ச் சிவனாய் அயனானாய்!" என்று இறைவனை இறைஞ்சி நின்றார் சடகோபாழ்வார். இன்னருள் வடிவினனாகிய இறைவன், உயிர்களுக்கு அறிவொளி வழங்கும் சுடர்மணி' விளக்காகவும் 'ஆதியும் அந்தமும் இல்லா அருளும் பெருஞ் சோதி'யாகவும் விளங்குகிறான். கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரத்தன்று நேரும் 'திருவிளக்குத் திருவிழா', அருள் வடிவினனாகிய ஆண்டவனின் சுடரொளியை நெஞ்சில் நினைந்து துதித்து மகிழ்வதற்காகவே முன்னோரால் ஏற்படுத்தப்பட்ட திருவிழா ஆகும். அத்திருநாளன்று, தமிழர்களின் வீடுகளி லெல்லாம் அழகிய விளக்குகள் வரிசை வரிசையாக வைக்கப்பட்டு ஒளிபரப்பி நிற்கும் காட்சி, உள்ளத்திற்குப் பெருமகிழ் வூட்டுவதாகும்.

முற்காலத்திலே, எரி வடிவினனாகிய இறைவனது இன்னருளைப்பெறும் நன்னோக்கத்துடன் அசுர வேந்தனாகிய மாவல் செய்தவேள்வி, தேவர்களுக்குப் பரிந்து சென்ற திருமாலால் தடைப்பட்டு விட்டது. அச்சமயத்திலே, தொடங்கிய வேள்வி நிறைவேறாமற் போனதால் நேர்ந்த தோஷம் தன்னைத் தொடராமல் நீங்கிவிட அருளுமாறும், தன்னை ஆட்கொண்ட நாளாகிய கார்த்திகை மாதத்திய கார்த்திகை நட்சத்திரத்தன்று, தீயினாலும் விளக்குகளினாலும் தம்மை த்ருப்திப்படுத்தி மகிழ்விக்கச் செய்துகொண்டருளத் திருவுள்ளம் பற்றுமாறும் அவ்வசுரன் திருமாலைப் பிரார்த்தித்துக் கொண்டான். கருணைக்கடலாகிய திருமாலும், அவன் கோரிய வரங்களைக் கொடுத்தருளினார். அவ் வைபவத்தைக் குறிப்பிடுவதே, ஆண்டுக்கொருமுறை தமிழ் நாட்டில் கொண்டாடப்பட்டு வரும் தீபோத்ஸவம்.

மனித வாழ்வுக்கு இன்றியமையாததாக வேண்டப்படுவது எது? உடலில் உயிர் தங்கியிருப்பதற்கு உறுதுணையாக இருப்பது எது? உடல் வளர்ச்சிக்கேற்ற உணவைப் பக்குவம் செய்து கொள்வதற்கு இன்றியமையாது வேண்டப்படுவது எது? இயற்கையன்னையின் கருணையையும் பயங்கரத்தையும் ஏககாலத்தில் உணர்த்தி நிற்பது எது? அறிவின் சுடரொளியைக் குறிப்பிடுவது எது? ஆண்டவனின் அருட்பெருஞ் சோதியை உணர்த்துவது எது? விண்ணுலகில் வாழும் அமரர்களை, மண்ணுலகத்திற்கு எளிதில் வரவழைக்கக்

கூடிய மகத்தான மந்திர சக்தி பொருந்தியது எது? மண்ணுலகில் வாழும் மறையவர்களை, மற்றெல்லோரும் புகழ்ந்து போற்றுமாறு பூதேவர்களாக உயர்விப்பது எது? தலை விரித்துத் தாண்டவமாடும் அசுரர்களையும் பேய்களையும் வெருட்டி துரத்திவிடக்கூடிய வீரசக்தி பொருந்தியது எது? காளி தேவியின் கோரவீர தாண்டவத்தைக் குறிப்பிடுவது எது? 'ஞான மேனி உதய கன்னி நண்ணிவிட்டது' போல், 'வானை நோக்கிக் கைகள் தூக்கி வளர்வது' எது? தனது செந்நிறத்தால் செம்மேனிச் செம்மலாகிய சிவபிரானையும், ஓங்கிக் கொழுந்துவிட்டு எரியும்போது ஓரத்தில் தோன்றும் இளநீலநிறத்தால் நீலமேனி வண்ணனாகிய திருமாலையும் நினைவூட்டி, தன்னிடம் அழிக்குந்தன்மையும் அளிக்குந்தன்மையும் ஒருங்கே அமைந்து விளங்குவதை உண்மை யன்பர்களுக்கு உணர்த்தி நிற்பது எது? அறிவின் குறியாகவும் உடலின் துணையாகவும் ஒளிர்வது எது? அதுவே, தீ! தீ!! தீ!!!

ஆவியிலும் அறிவினிடையிலும் அன்பை வளர்ப்பவன் எவன்? மண்ணுலகில் வாழும் மனிதர்களுக்கு, விண்ணுலகில் வாழும் அமரர்களின் அருள் எளிதில் கிடைக்கச் செய்பவன் எவன்? உயிரோடு உயிர் கலந்த உண்மைக் காதலர்களின் இனிய காதலை வளர்ப்பவன் எவன்? கோர தாண்டவம் செய்யும் வீரகாளியின் சீரிய மைந்தனாகச் சிறந்து விளங்குபவன் எவன்? மனம் கொண்டுவிட்டால் எதையும் எளிதில் பொசுக்கி ஒழித்துவிடக்கூடிய பயங்கர சக்திபடைத்த வீரன் எவன்? அமிர்தம் அருந்திக் களித்துச் செருக்கிக் கிடக்கும் அமரர்களையும் அவ்வமிர்த பானத்தினால் அனுபவிக்கும் ஆனந்தத்தைக்கூட மறக்கும்படி செய்வித்து, விருந்துண்ணும் ஆவலினால் மண்ணுலகத்தை நாடி வரும்படி செய்விப்பவன் எவன்? மனிதர்களின் ஆருயிர்த் தோழனாக விளங்கும் தேவன் எவன்? தீமைகள் யாவையும் அழித்து தூய்மைப் படுத்துபவன் எவன்? உயிர் வாழ்வுக்கு இன்றியமையாத உணவுகளை, பலவகைப்பட்ட சுவையுடையனவாகப் பண்படுத்திப் பரிவோடு அளிப்பவன் எவன்? நாட்டுக்கு நேரக்கூடிய தீமைகளைப் போக்கி, பல நலன்களையும் விளைவிக்கக்கூடிய தெய்விகத்தன்மை படைத்தவன் எவன்? காலகாலனும் நீலகண்டனுமாகிய சூலபாணியின் செங்கையில் தங்கியிருந்து அவனுடன் ஆனந்தத் தாண்டவமாடும் அரும்பெரும் பேறுபெற்ற செல்வன் எவன்? 'கட்டுகள் போக்கி விடுதலை தந்திடும் கண்மணி போன்றவன்' எவன்? நம்மெல்லோரையும் இரவும் பகலும் இடைவிடாமல் பெரும் பரிவுடன் காத்து நிற்கும் கருணையாளன் எவன்? இருளடர்ந்த துன்பக்காட்டைப் பொசுக்கி ஒழிப்பவன் எவன்?

மனிதர் நெஞ்சில் தோன்றும் பலவகைப்பட்ட கவலைகளையும் நீக்கிக் கொடுப்பவன் எவன்? உயிர் வாழ்க்கை நீடித்திருக்கச் செய்பவன் எவன்? ஒளி மயமாக இலங்கும் உயர் பரம்பொருளின் உண்மையை, ஒவ்வொரு நிமிஷத்திலும் உயிர்களுக்கு உணர்த்தி நிற்பவன் எவன்? பலவகைப்பட்ட கவலைகளால் உற்சாகம் இழகது கலக்கம் மிகுந்து மனம் வருந்தித் தவிப்பவர்களுக்கு, 'அஞ்சேல்' 'அஞ்சேல்' என்று அபயம் அளித்து புத்துயிர் அளித்து புத்துணர்வூட்டி உற்சாகத்தைப் பெருக்கி வீர உணர்ச்சியை ஊட்டும் சீரிய வீரத்தோழன் எவன்? நம்பிக்கையின் வடிமையினாலும் வீரத் துணிவினாலும் பன்முறைகளிலும் வெற்றி விளைத்துக் கொடுப்பவன் எவன்? பயமாகிய ஈனப் பேயை உயிருடன் சுட்டுப் பொசுக்கி சாம்பலும் எஞ்சாதவாறு

துடைத்துத் தூய்மைப்படுத்திவிடும் வீரநாயகன் எவன்? வீரச் செயல்களுக்குக் காரணபூதனாக விளங்குபவன் எவன்? வேறு எதனாலும் தடைப்படுத்த முடியாத மகத்தான சக்தி பொருந்தியவன் எவன்? மனிதரின் மனக் கோயிலிலே, குற்றமற்ற நல்லிச்சைகளையும் சீரிய வேட்கைகளையும் கருத்தொருமித்த தெய்விகக் காதலையும் நல்லற விருப்பங்களையும் மேன்மேலும் வளர்க்கக் கூடிய தேவதூதன் யார்?

"வானகத்தைச் சென்று தீண்டுவன் இங்கென்று
மண்டி எழும் தழலைக்—கவி
வாணர்க்கு நல்லமுதை—தொழில்
வண்ணம் தெரிந்தவனை—நல்ல
தேனையும் பாலையும் நெய்யையும் சோற்றையும்
தீம்பழம் பாலினையும்—இங்கே உண்டு
தேக்கிக் களிப்பவனை—பெருந்திரள்
சேர்ந்து பணிந்திடுவோம் வாரீர்!"—என்றும்,

"சித்திர மாளிகை பொன்னொளிர் மாடங்கள்
தேவத் திருமகளிர்—இன்பம்
தேக்கிடும் தேனிசைகள்—சுவை
தேறிடு நல்லிளமை—நல்ல
முத்து மணிகளும் பொன்னும் நிறைந்த
முழுக் குடம் பற்பலவும்—இங்கே தர
முற்பட்டு நிற்பவனை—பெருந்திரள்
மொய்த்துப் பணிந்திடுவோம்!"—என்றும்

வீர பாரதியார் புகழ்ந்து பாடநின்ற வீரதேவன் யார்? அவனே, அருளாளனும் அற வீரனுமாகிய அக்கினி தேவன்!

அத்தகைய அக்கினி தேவனது வழிபாடு, இந்நாட்டில் சிறந்து விளங்கிய காலத்திலே, இந்நாட்டில் எல்லா வகைப்பட்ட வளங்களும் நிறைந்திருந்தன; இந்நாட்டு மக்களெல்லோரும் குறைவொன்றுமின்றி குளிர்ந்த சிந்தையினராய்க் குதூகலமாக வாழ்ந்து வந்தனர். நாட்டு நலத்தையே தமது நலமாகக் கொண்டு, மற்றவர்களின் க்ஷேமத்தின் பொருட்டு இறைவனை வழிபட்டு வந்தவர்களான மறையோர்—செந்தழல் வளர்க்கும் செங்கையினராய் செந்தண்மை பூண்டொழுகிவந்த அந்தணர்கள்—தமது நல்லொழுக்கத்தினாலும் ஹிருதய பூர்வமான உண்மைப் பக்தியினாலும் அக்கினி தேவனைப் பெரிதும் மகிழ்வித்துவந்த வேதியர்கள் தங்களது குல தருமங்களில் குன்றாது வாழ்ந்துவந்த வரையில், இந்நாட்டில் செல்வத்தின் அதி தேவதையாகிய திருமகளும் கல்வியின் அதி தேவதையாகிய கலைமகளும் கைகள் கோத்துக் களிநடம் புரிந்துகொண் டிருந்தனர். அத்தகைய அந்தணர்கள் என்று முதல் அக்கினி தேவனது வழிபாட்டை மறந்து—ஐவகைப்பட்ட வேள்விகளைத் துறந்து—தங்களது குல தருமங்களுக்குப் பொருந்தாத அடிமைத்

தொழிலில்—ஊழியப் பிழைப்பில்—கருத்தைச் செலுத்தத் தொடங்கினரோ, அன்று முதல் இந்நாட்டில் பலவகைப்பட்ட துன்பங்கள் பெருகத் தொடங்கி விட்டன. நாட்டு நலத்திற்கேற்ற நல்லற வேள்விகள், இந்நாட்டினின்றும் மறைந்தே போய்விட்டன. செந்தழலை வளர்த்துப் புகை எழுப்பும் தொழிலை மேற்கொள்ள வேண்டிய செங்கைகள், சிற்சில விடங்களில் சிகரெட் பிடிக்கும் கைகளாகவும் மாறிவிட்டன. புகை வளர்க்கும் தொழிலை மேற்கொள்ள வேண்டிய அவர்களது கைகளுக்குப் பதிலாக, சிற்சில விடங்களில் அவர்களது வாயே அத் தொழிலை மேற்கொண்டு விட்டது! என்ன செய்வது? எல்லாம் காலத்தின் கோலம்போலும்!

கார்த்திகை மாதத்திய கார்த்திகைத் திருநாளில் கொண்டாடப்படும். திருவிளக்குத் திருவிழா, தற்காலத் தமிழ்நாட்டிலும் எல்லா வீடுகளிலும் எல்லாக் கோயில்களிலும் கொண்டாடப்பட்டு வருகிறது. அத் திருநாளன்று, தமிழ்நாட்டுக் கிராமங்களில் காணப்படும் காட்சிகள், இக்காலத்திலும் பெரு மகிழ் வூட்டுவனவாகவே இருக்கின்றன. நீல வான வீதியிலே, தனது வெள்ளிக் கிரணங்களை எங்கும் வாரி இறைத்த வண்ணம் மோகன சந்திரன் உலவப் புறப்படும் அந்தி வேளையிலே, மனையை விளக்கவந்த மணிவிளக்கனைய இள மங்கைகள், குறு முறுவல் தவழும் குளிர்மதி முகத்துடன் கூடியவர்களாய், தெரு வாசலில் நீர் தெளித்துக் கோலமிட்டு சிறு சிறு அகல் விளக்குகளில் எண்ணெயிட்டு ஏற்றி வைத்து மங்கல விளக்கின் வடிவில் விளங்கும் மலர்மகளை மனத்தில் நினைத்துக் கை குவித்துத் துதித்து தீபாலங்காரம் செய்து மகிழும் காட்சி, கண்களுக்குப் பெரு விருந்தளிக்கும் இனிய காட்சியாகும். தெருக்களில், சிறுவர்கள் தீப்பொறி பறக்கும் கார்த்திகைப் பந்தங்களை வேகமாகச் சுற்றி விளையாடும் காட்சி, காண்போர்க்குப் பெரிதும் இன்பூட்டுவதாகும். ஆனால், இன்றைய நாளில் நகரங்களில் காணப்படும் காட்சிகளோ, அவற்றிற்கு நேர்மாறாக இருக்கின்றன. 'நகரம்' எனப்படும் 'நரக'த்தில் வசிக்கும் நவீன நாகரிகப் பெண்மணிகள் கண்களைக் கூசச்செய்யும் மின்சார விளக்குகளுடனும் மண்ணெண்ணெயால் எரியும் 'லாந்தர்'களுடனுமே பழகுபவர்களாதலின், லக்ஷ்மீகரமான—குளிரொளி அளிக்கும்—அகல் விளக்குகளில் எண்ணெயிட்டு ஏற்றி வைத்து மகிழும் பாக்கியம், பெரும்பாலும் அவர்களுக்கு வாய்ப்பதில்லை. கார்த்திகைத் திருநாளன்று, நகரத்தில் வசிக்கும் சிறுவர்களுக்கு சீன வெடியும் பட்டாசும் கொளுத்திக் கையைச் சுட்டுக்கொள்ளத் தெரியுமேயன்றி, கிராமத்துச் சிறுவர்களைப்போல் தீப்பொறி பறக்கும் பதங்களை உடலில் ஒரு தீப்பொறியும் படாதவாறு வேகமாகச் சுற்றி மகிழும் வீர விளையாட்டு தெரியாது. ஆதலின், தமிழ் நாட்டுக் கிராமங்களில் 'திருவிளக்குத் திருவிழா' இன்றும் எவ்வளவோ குதூகலமாகக் கொண்டாடப்பட்டு வந்தும், அத் திருவிழா நகரங்களில் மட்டும் சந்தடி தெரியாமல் வந்து விட்டுப் போய்விடுகிறது.

'திருவிளக்குத் திருவிழா' எனும் தீபோத்ஸவம், பெரும்பாலும் தமிழ் நாட்டிலுள்ள எல்லாக் கோயில்களிலும் கொண்டாடப்பட்டு வருகிறது. எனினும், அத் திருவிழா மிக மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வரும் க்ஷேத்திரங்கள், வைணவத்தில் திரு அரங்கப் பெருநகரும் சைவத்தில் திருவண்ணாமலையுமேயாம். திரு அரங்கப் பெருநகரிலே, திருக்கார்த்திகைத்

திருவிழா கொண்டாடப்படும் வைபவம், மிக மிகச் சிறந்ததாகும். அன்று, பெருமான் ஸந்நிதியில் திருவிளக்கு வைக்கும் உரிமை, உத்தமநம்பி ஐயங்கார் என்பவருக்கு உரியதாகும். அன்று மாலையிலே, அந்த கைங்கர்யபரர் பெருமாளின் சகல விருதுகளுடனும் மேளதாளங்களுடனும் தமது வீட்டினின்றும் மஹா வைபவமாகப் புறப்பட்டு வந்து, கோயில் வாயிலில் யாவற்றையும் நிறுத்தி விட்டு, மடைப்பள்ளிக்குள் சென்று, அங்கு பரப்பப்பட்டுள்ள நெல்லின்மேல் எரிந்து கொண்டிருக்கும் வெள்ளி விளக்கை எடுத்துக்கொண்டு புறப்படுவார். அவ் விளக்கினருகில் எரிந்து கொண்டிருக்கும் மற்ற எட்டு அகல் விளக்குகளை,உத்தம நம்பி ஐயங்காரது குடும்பத்தினர் நால்வரும் வேதவ்யாஸ பட்டர் ரங்காசார்யர் அமுதனார் அழகிய மணவாளன் ஸபையார் முதலிய நால்வரும் எடுத்துக்கொண்டு புறப்பட்டு உள்ளே போய் பிரதட்சிணமாக சந்நிதிக்குள் செல்வார்கள். பெருமாளை ஆராதிக்கும் அர்ச்சகர், உத்தம நம்பி ஐயங்கார் கொண்டுவந்த வெள்ளி விளக்கை வாங்கி, அரவணையின்மேல் அறிதுயில் கொண்டு கிடக்கும் பெரிய பெருமாளுக்குக் கண்டருளப்பண்ணி, பெருமாளுக்கு எதிரிலுள்ள 'குலசேகரன் படி' எனப்படும் படியின்மேல் பரப்பப்பட்டுள்ள நெல்லின்மேல் வைப்பார். மற்ற எட்டு விளக்குகளும் நம்பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணப்பட்டு, கர்ப்பக் கிருகத்திற்கு வெளியிலுள்ள—இருபத்து நான்கு திருத்தூண்கள் கொண்ட—'காயத்திரி மண்டப'த்தில் நாற்றிசைகளிலும் திக்குக்கு இரு விளக்குகள் வீதம் வைக்கப்படும்.

பின்னர், செங்கழுநீர் மலர்களினாலேயே அலங்கரிக்கப் பெற்ற அற்புதப் பூந் 'திருவாசி'யிலே புறப்பட்டருளும் நம்பெருமான், சக்கரத்தாழ்வான் சந்நிதி வாசலை அடைந்து நிற்பார். அப்பொழுது, 'திருச்சுற்றுக்காரன்' எனும் பெயருடைய கைங்கரியபரன் பெருமாளிடம் வந்து நின்று, பெருமாளை ஸேவித்து 'மரியாதை' முதலியன பெற்று, தான் கொண்டுவந்த பெரிய திருப்பந்தத்தை ஸ்தானீகரிடம் அளிப்பான். அவர் அதை வாங்கி, பெருமாளுக்கருகில் நிற்கும் தாஸ நம்பியின் பந்தத்தில் கொளுத்தி, பெருமாளுக்கெதிரில் மூன்று முறை சுற்றிவிட்டு அவனுடைய தலையில் வைப்பார். அவன் அதைக் கொண்டுபோல், தென்னங்கால்கள் நட்டுச் சுற்றிலும் கூடு போல் அமைத்து மூங்கிற்கழிகளில் கட்டிய பனையோலைகளால் மூடப்பட்டுள்ள 'சோக்கப் பனை'க்குள் புகுந்து, இரண்டொரு நிமிஷங்களில் மேலேறிச் சென்று உச்சியில் தீவைத்துவிட்டு, மட்டைகள் எரியத் தொடங்கும்போதே சிறிதளவும் அச்சமின்றி சரசரவென்று இரண்டொரு நிமிஷங்களில் கீழிறங்கி வந்து விடுவான். இரண்டு பனைமரங்களின் உயரமுடைய அந்த சொக்கப்பனை தீப்பற்றி எரியும் காட்சி, மிகுந்த பயங்கரமான காட்சியாக இருக்கும்.

திருவண்ணாமலை, பஞ்சபூத சிவலிங்க ஸ்தலங்களுள், அக்கினி சொரூபமான தேயு லிங்கம் அமைந்து விளங்கும் ஸ்தலமாகும். கார்த்திகை மாதத்திய கார்த்திகையன்று மாலையிலே, நீல முகில்கள் தவழ்ந்து செல்லும் நீல மலையாகிய அண்ணாமலையின் உச்சியிலே, ஏராளமான நெய் ஊற்றப்பெற்றிருக்கும் மிக மிகப்பெரிய இரும்புக் கொப்பறையாகிய விளக்கு ஏற்றப்படும். அதே சமயத்திலே, அப்பேரொளி விளக்கை நோக்கியவாறே, அண்ணாமலையண்ணல் தமது தேவியாரான உண்ணாமுலையம்மையுடன் காட்சியளித்து

நிற்பார். அவ்வேளையிலே தீபதரிசனம் செய்து நிற்கும் அன்பர்கள், பக்தி வசப்பட்டு நிற்பரென்பதைப் பகரவும் வேண்டுமோ?

அருள் வடிவினனாகிய ஆண்டவனது ஞானப் பேரொளியை ஆருயிர்களுக்கு நினைவூட்டுவதும்; செந்தீ வடிவினனாகிய இறைவன்; தன்னை உண்மையன்புடன் வழிபட்டு உள்ளம் உருகி நிற்கும் உண்மையன்பர்களின் பாவ—பாசங்களை எரித்துத் தூய்மைப்படுத்தியருள்வன் என்னும் உண்மையை அன்பர்களுக்கு உணர்த்துவதும்; அக்கனி வழிபாட்டின் இன்றியமையாமையை பாரத மக்களுக்கு அறிவுறுத்துவதும், ஒவ்வொருவர் உள்ளத்திலும் கோயில் கொண்டுள்ள அருட்பெருஞ் சோதியை, தம்மில் தாமே கண்டு களிக்குமாறு எல்லோரையும் தூண்டுவதும்; மலர் மகளின் அகத்திற்கு உகந்த அகல் விளக்குகளே மனையின் சிறப்புக்கு இன்றியமையாதவை என்பதை இக்காலத்தினருக்கு உணர்த்துவதும்; வெறும் விளக்குகளை ஏற்றி வைத்துக் கும்பிடும் அளவில் நின்று விடாமல், மெய்யன்பாகிய தூய்ய அகலிலே, குற்றமற்ற ஹிருதயபூர்வமான உண்மைப் பகவத்—பக்தியாகிய நெய்யைச் சொரிந்து, பகவத்தியானமாகிய திரியைக் கொளுத்தி என்றும் அணையாத ஞானச் சுடர்விளக்கை ஏற்றி ஆனந்திக்க வேண்டியது, மனிதப் பிறவி தாங்கிய ஒவ்வொருவரும் செய்யவேண்டிய சீரிய கடமை என்னும் உன்னத தத்துவத்தை உணர்த்துவதும் 'திருவிளக்குத் திருவிழா'வே ஆகும், ஆதலின், நாமெல்லோரும் அத் திருவிழாவின் உன்னத தத்துவங்களை நன்கு உணர்ந்து, அதைச் சிறப்பாகக் கொண்டாட உறுதி செய்துகொண்டு, பின் வரும் அருள் மொழிகளின் அரும் பொருளைச் சிந்தித்துச் சிந்தித்து ஆனந்திக்கக் கடவோம்:—

"தீயினிற் சுட்டியல் சேர்தரச் செலவியல்
ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி;
தீயினிற் பக்குவம் சேர்குணம் இயற் குணம்
ஆய் பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி"

"அருள் ஒளி விளங்கிட ஆணவம் எனும் ஓர்
இருள் அற என் உளத்(து) ஏற்றிய விளக்கே!
துன்புறு தத்துவத் துரிசெலாம் நீக்கி, நல்
இன்புற என் உளத்(து) ஏற்றிய விளக்கே!
மயல் அற அழியா வாழ்வு மேன்மேலும்
இயல் உற என் உளத்(து) ஏற்றிய விளக்கே!
தேற்றிய வேதத் திருவடி விளங்கிட
ஏற்றிய ஞான இயல் ஒளி விளக்கே!
ஆகம முடிமேல் அருள் ஒலி விளங்கிட
வேகம(து) அறவே விளங்(கு) ஒளி விளக்கே!
ஆரியர் வழுத்திய அருள் நிலை அனாதி
காரியம் விளக்கும் ஓர் காரண விளக்கே!"

# சிறார் விளையாட்டு

—(0)—

(கோட்டாறு-தே. ப. பெருமாள்.)

சிறார் விளையாட்டில் வேட்கை மிகவுடையார். இவரின் சிறுமைப் பருவத்தில் பெரும்பாகமும் இவ்விளையாட்டிலேயே கழிகின்றது. இவ்விளையாட்டில் புக்க சிறார் உள்ளத்தின் கண் கவல் காணுதல் அரிது. பிற துன்பத்தால் அவ்வுள்ளம் அலைக்கப்படுதலில்லை. அவ்வுள்ளத்திலே எஞ்ஞான்றும் எவ்வமையமும் மகிழ்வெனும் ஆறு பெருக்கெடுத்தோடிக்கொண் டிருக்கும். அவ்வாறு கொணரும் இன்பம் எனும் மணிக்குவியலை சிறார் உடலெங்கும் அள்ளிச் சிதறி இறைத்தன்மை புலனாக நிற்பர்.

சிறாரின் இவ்விளையாட்டு பலதிறத்தின. சில சிறுவர் பந்தாடிக் களிப்பர். சிலர் மண்ணளைந்து மகிழ்வர். இன்னுஞ் சிலர் பொழில்புக்கு எழில் மலர் கொய்து இன்புறுவர். பின்னுஞ் சிலர் தென்னம் பொழிற்போந்து, ஆண்டு பரந்த மணலிடை யமர்ந்து, அம்மணலிடையே வெம்பி வீழ்ந்த தென்னையின் கொச்சுகாய் கண்டெடுத்து, அதினூடே ஈர்க்கோல் கோத்து தேரினுருவை யொப்பச் செய்து அஃதை உண்மைத் தேரென எண்ணித் தெருவினூடே இழுத்துச் செல்வர். மற்றுமொரு குழுவார் மரத்தாலமைத்த மூக்கால்தேர் பலகொண்டு, அணிமரச் சாலை போந்து ஆண்டு அவைகட்கு போட்டி ஓட்டங் காட்டுவார். வேறொரு குழுவார் வண்டுபிடித்தும், மீன் பிடித்தும், வழியிடை பெண்சிற்றி லழித்தும் களியாட்டயர்வர். இவ்வாறே சிறாரெல்லாம் தம்மனம்போனவாறு விளையாடல் புரிந்து மனம் மகிழ்வு பூப்பர்.

சிறாரின் இவ்விளையாடலைக் கண்டு தாதையர் மகிழ்வர். தாதையர் துன்பம் தஞ்சிறார் விளையாட்டைக் கண்டதும் காற்றடிபட்ட பஞ்செனப் பறக்கிறது. உரன்பெற்ற நடையால் விளையும் இவ்விளையாடல் அவர்கட்கு தஞ்சிறாரைப்பற்றி நல்லெண்ணமும் கொடுக்கிறது. சிலதாய்மார்கள் தஞ்சிறார்க்கு வேண்டும் விளையாட்டுப் பொருட்களையெல்லாம் தாமே செய்து கொடுக்கிறார். அப்பொருட்களைக் கொண்டு சிறார் தந்தாயைப் போற்றி புகழ்மொழி கூறி விளையாடுங்கால் அத்தாய்மார் உள்ளம் எத்தகைய களிப்புறும்! அதை எழுத்தால் எழுத இயலுங்கொல்? இன்னுஞ் சில தாய்மார் தமது உயரிய பருவத்தையு மோராது, பெருங் கூட்டத்தி னிடையேயும் தஞ்சிறாருடன் விளையாடுகிறார். இவர் விளையாடுதல விளையாடும் வேட்கையினாலோ வெனின் அங்ஙனமன்று. இவர் தஞ்சிறார்பாலுள்ள அன்பால் அவர் விளையாட்டுக் காதலில் தாமும் மூழ்கி விளையாடுகிறார். இவ்வாறு இவர் விளையாடுதலை சீத்தலைச் சாத்தனாரென்னும் செந்தமிழ்ப் புலவர் தமது நூற்கண்,

"தளர்நடை தாங்காக் கிளர்பூட் புதல்வரைப்
பொலந்தேர் மீமிசை புகர்முக வேழத்

திலங்கு தொடி நல்லார் சிலர் நின்றேற்றி
யாலமர் செல்வன் மகன் விழாக் கால்கோள்
காண்குனோ வெனக் கண்டு நிற்குநரும்."

என்ற பொன் மொழிகளாய பன்னிறங்களால் சித்திரமாகத் தீட்டிக் காட்டியுள்ளார்.

சிறாரின் தாதையரே யன்றி பிறிதுள்ளாரும் இச்சிறார் விளையாட்டைக் காணின் மகிழ்வு பூப்பர். புலவர் பெருமக்க ளெல்லாம் சிறார் விளையாட்டில் உள்ளந்தோய்ந்து இன்பங் கண்டவராவர். இவரெல்லாம் தாம் யாத்த நூற்களின் கண்ணும் தம்மை மயக்கிய இவ்விளையாட்டைக் குறிப்பாராயினர். உருத்திரங் கண்ணனார் எனும் செந்தமிழ்ப் புலவர் தாம் யாத்த பட்டினப் பாலை எனும் நூற்கண்,

"அகனகர் வியன் முற்றத்துச்
சுடர்நுதன் மடநோக்கி
னேரிழை மகளி ருணங்குணக் கவரும்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்கால் புதல்வர் புரவியின் றுருட்டு
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்."

என்ற பொன் பொன் மொழிகளாலும், தமது பிறிதொரு நூலாகிய பெரும் பாணாற்றுப் படையில்,

"மொட்டினை
முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்
.........................................
கொடுங்கான் மாமலர் கொய்து கொண்டவண்
பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டிப்
புணர் நார்ப்பெய்த புனைவின் கண்ணி
யீருடை யிருந்தலை யாரச் சூடிப்
பொன்காண் கட்டளை கடுப்பச் சண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பி
னிரும்பு வடித்தன்ன மடியா மென்றோல்
கருங்கை வினைஞர் காதலஞ் சிறார்"

என்றும்,

"தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
வூரா நற்றே ருருட்டிய புதல்வர்
தளர்நடை வருத்த வீட அலர் தனம்
செவிலியம் பெண்டிர்த் தழீஇ பாலார்ந்
தமளித் துஞ்சும்"

என்ற செஞ்சொல்லடிகளாலும் விளக்கிக் காட்டுவாராயினர்.

பலதிறத்தினவாகிய இச்சிறாரின் விளையாட்டை இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று நல்விளையாட்டு. பிறிதொன்று தீய விளையாட்டு.

நல்விளையாட்டு சிறுரின் வாழ்வைச் செம்மைப்படுத்துவது. தேர் விளையாட்டு, பந்து விளையாட்டு, பொழிற் புகுந்தாடுமாட்டு ஆதியன வெல்லாம் நல்விளையாடலின் பகுதிகளாம். இவ்விளையாட்டு சிறுரைப் பின்னை ஞான்று இயற்கையோடே இயைந்து வாழச் செய்கிறது. பொழில் புகுந்தாடுஞ் சிறுர் அப்பொழிலிடை நிறைந்து விளங்கும் இயற்கை எழில் காணுகிறுர். அவ் வெழிலில் அவர்கள் மூழ்கி அதை யாக்கிய இறைவனை எண்ணுகிறுர். அது போழ்து அவரது உள்ளத்தின் கண் ஒருதிற மகிழ்ச்சி உண்டாகிறது. அம் மகிழ்ச்சியால் அவர்கள் பெரு இன்பத்தில் மூழ்கி இறைவனிடம் மிகுந்த அன்பு கொள்கிறுர். இவ்வன்பே அவர்களைப் பின்னைஞான்று உய்யச் செய்வது. 'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்ற தமிழறிஞர் பொன்னுரைப்படி சிறுமையில் செய்யும் நற்செய்கையே பின்னை ஞான்றில் இவரது வாழ்வில் நிறைந்து விளங்குகிறது. மன்பதையில் இன்று மாபெரும் அறிஞராய் விளங்கும் பெரியாரெல்லாம் இத்தகைய நிலை எய்தியதற்கு காரணம் சிறுமையில் அவர் கொண்ட நல்விளையாடலேயாம். இளமையில் நல்விளையாடல் கொண்டவ ரெல்லாம் பின்னை ஞான்றில் செல்வராயும் அறிஞராயும் நுண்விளைபுரியும் மக்களாயும் பொலிவர் என்பது திண்ணம். இது உலகிடைக்கண்ட அனுபவமேயாம்.

தீய விளையாடலால் சிறுரின் வாழ்வு கெடுகிறது. மீன் பிடித்தல், வண்டு பறத்தல் ஆதியனவெல்லாம் தீய விளையாட்டின் பகுதிகளாம். தீய விளையாட்டில் புக்க சிறுர் உள்ளம் வன்கண்மையால் வலிவு பெறுகிறது. அவ்வுள்ளத்தில் இன்பம் விளைவதில்லை. அவ்வுள்ளம் கொலைத் தொழிலால், கொடுவினையால் கல்லினும் கடியதாய் விளைந்துவிடும். மறமுறைந்த இத்தகைய நெஞ்சத்தில் இறைவன் இலங்கவும்மாட்டான். அவனியல்பு விளங்கவுஞ் செய்யா. இவர் பின்னை ஞான்று உலகந்தூற்றுந் தீயவராய் வாழ்வு நடாத்தத் தொவங்குகின்றுர். இவரிடமே சூது, காமம், களவு போன்ற கொடுவினைக ளெல்லாம் சரண்புகுகின்றன. இவரைக் கண்டு அஞ்சாத மக்களிலர். ஒதுங்காத சிறுவரிலர். நகையினை நச்சி சிறுவரை இவர் அமையம் நேர்ந்துழி யெல்லாம் கோறல் செய்ய பின்வாங்குவதில்லை யாதலின், உலகத்தாய் இவரை என்று இழப்போமென்று எதிர் நோக்கிக்கொண்டிருப்பள். என்னே உலகத்தாய்க்கு இவர்பாலுள்ள வெறுப்பு! இதற்கெல்லாம் ஏதுவெது? இவர் சிறுமையில் கையாண்ட தீய விளையாடலன்றோ!

சிறுர் விளையாட்டில் தாதையர்கள் நன்கு கவனம் செலுத்துதல் வேண்டும். அவர்கள் தீய விளையாடலில் புகாவாறு பாதுகாத்தல் வேண்டும். முதற்கண் சிறுரின் இருதிற விளையாடல்களும் தாதையர்க்கு இன்பத்தையே பயக்கின்றது. ஆனல் தீயவிளையாடலைக் கைக்கொண்ட சிறுர் பின்னை ஞான்று தாம் கெட்ட பெயர் ஏற்பதுடன் தம் தாதையர்க்கும் தீராப் பழியை வாங்கிக் கொடுக்கின்றுர். இதனல் தாதையர் பெருமையும் உயர்வும் குன்றப் பெறுகிறது. சிறுமையில் நல்விளையாடலைப் பெற்ற சிறுரோ பின்னை நாளில் தாம் நற்பெருமை அடைதலுடன் தம் தாதையர்க்கும் நற்புகழையும் பெயரையும் வாங்கிக்கொடுக்கிறுர். ஆதலின் தாதைய ரெல்லாம் தஞ்சிறுரை அவரின் சிறுமைப் பருவத்திலேயே நல்விளையாடலில் பயிற்சி பெறுவித்தல் வேண்டும். அதுவே சிறுர்க்குடிம் தாதையர்கும் நன்மை பயப்பதாகும்.

# பன்னிரு ஜோதி லிங்கங்கள்

(K. V. சிவசுப்பிரமணியன், B. A.,)

ஹிந்து சமயத்தின் உட் சமயங்கள் பலவற்றின் தத்துவங்களைக் கற்பதையே தன் வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்ட ஒருவன், பாரத நாடு முற்றும் யாத்திரை செய்யவேண்டியது அவசியமென நூல்கள் கூறுகின்றன. சாதாரணமான ஒரு மனிதன்கூட தேச யாத்திரையால் தன் உலகியலறிவை விருத்திசெய்து கொள்வதுமல்லாமல் நாட்டின் பல புண்ணிய க்ஷேத்திரங்களின் வசிக்கும் மகான்களின் ஆசீர்வாதத்தையும் பெறுதல் கூடும். கல்வியில்வல்ல ஒரு புலவனுக்கு அந்த யாத்திரையே தன் கல்வித் திறமையை மக்ககளிடையே பரப்புவதற்கும் வழி காட்டியாக இருக்கிறது. இத்தகைய பலன்களைத் தரும் யாத்திரைகள் ஏழைகள், பணக்காரர்கள், கிரஹஸ்தர்கள், சந்நியாசிகள் முதலிய யாவராலும் செய்யப்படுகின்றன.

சங்கரரைப் போன்ற சைவ சமய ஆசாரியர்களும் இரேணுகர் முதலான வீரசைவ பஞ்சாசாரியர்களும் வடக்கே இமயமும் தெற்கே குமரியும் எல்லையாகவுடைய நிலப் பரப்பு முழுதும் யாத்திரை செய்ததாகச் சொல்லப்படுகிறது. அவர்கள் இமயமலையிலுள்ள கடுங்குளிர்ப் பிரதேசங்களுக்கெல்லாம் சென்றதாகத் தெரிகிறது. பண்டைக்கால மக்கள் தங்களுக்குரிய புண்ணிய ஸ்தலங்களை இந்தியாவின் பல பாகங்களிலும் ஏற்படுத்திக்கொண்டனர். யாத்ரீகர்கள் ஒவ்வொரு நகரத்தின் சரித்திரத்தையும் அங்கே வசிக்கும் மக்களின் வாழ்க்கை முறையையும் செவ்வனே யறிந்துகொள்ள வேண்டுமென்னும் நோக்கத்தால் பற்பல விடங்களில் கோவில்கள் நிறுவப்பெற்றன. அரசர்கள் பலர் அங்கங்கே கோவில்களை ஏற்படுத்தி பூஜைக்காக மானியங்களையும் ஏற்படுத்தினர். மற்றும் அக்காலத்துப் பெரியார் சப்த நதிகளுக்கு புராணவாயிலாக அளப்பரும் பெருமையை அளித்துப் போயினர். இன்றுங் கூட அவ்வேழு நதிகளையும் குறிப்பிடும் ஒரு சுலோகம் பூஜா காலங்களில் சொல்லப்படுகின்றன. அதுபோலவே இந்தியாவின் பல பாகங்களிலும் அமைந்திருக்கும் 12 சோதிலிங்கங்களைப் பற்றிய சுலோகத்தை, சமய நூல் கற்று சாஸ்திர ஆராய்ச்சி புரிவோர் மனப்பாடம் செய்கின்றனர். மூன்று சுலோகங்கள் அவ்விலிங்கங்களின் பெயர்களை மாத்திரம் கூறுகின்றன. மற்றும், 12 சுலோகங்களடங்கிய ஒரு பெரிய செய்யுள் 12 இலிங்கங்களின் ஒவ்வொன்றின் இருப்பிடத்தையும் அதன் பெருமையையும் பரக்கக் கூறுகின்றது. சிவபுராணத்தில் 38-ம் அத்தியாயம் அவற்றைப் பற்றி விவரமாய்க் கூறுகிறது. அவை வருமாறு:—

"ஸௌராஷ்ட்ரே சோமநாதம்சா ஸ்ரீசைலே மல்லிகார்ஜுனம்
உஜ்ஜயின்யம், மஹாகாலம் ஓம்காரம் அமலேஸ்வரம்
ப்ரஜ்வல்யம், வைத்யநாதம், சாதாகின்யம் பீம சங்கரம்

*சேது பந்தேது ராமேசம், நாகேசம் தாருகாவனே*
*வாரணஸ்யாந்து விஸ்வேஸம் த்ரியம்பகம் கௌதமீதடே*
*ஹிமாலயேது கேதாரம் கிரிஷ்ணேஷம்சா சிவாலயே.''*

இந்த சுலோகத்தைப் படித்த மாத்திரத்தில் அதிலுள்ள ஊர்கள் யாவும் இந்தியாவின் பல பாகங்களிலும் பரந்திருப்பதைக் காணலாம். இதில் கூறப் பட்ட பெயர்களை மனனம் செய்த ஒருவனுக்குத் தன் தாய் நாடாகிய இந்தி யாவின் நிலையைப் பற்றிய அபிப்பிராயம் அவனது மனக்கண்முன் தோன்றும். அப்போது அவனது மனதில் மத வேறுபாடு, சாதி சமய வேறுபாடு, தாய் மொழி வேறுபாடு முதலியவையெல்லாம் தோன்றாது மறைந்துவிடுகின்றன. ஆனால் "எல்லாம் சிவமயம்'' என்னும் மகத்தான உணர்ச்சி எங்கும் நிலவுகின் றது. நம் தேசத்துப் பண்டைக்கால மக்கள் அரசியலமைதி, பொருளாதார ஒற்றுமை முதலிய யாவும் சமயப் பூசல்களின்றி மத ஒற்றுமையினாலேயே ஏற் படுகின்றன என்பதை நன்கறிந்திருந்தார்கள்.

இனி, பரத கண்டத்திலுள்ள பன்னிரு ஜோதிலிங்கங்களைப் பற்றிக் கவனிப்போம். அவை அமைந்திருக்குமிடங்களெல்லாம் மத சம்பந்தமான கீர்த்திவாய்ந்த இடங்களாக பண்டைக் காலத்தில் கொண்டாடப் பெற்றுவந் தன. இக்காலத்திலும் கொண்டாடப்படுகின்றன. இவ்விலிங்கங்களை ஸ்தா பித்திருக்குமிடங்களுக்கு ஆண்டுதோறும் விழாக்காலங்களில் சிவ பக்தர்கள் லட்சக் கணக்கில் யாத்திரை செய்கின்றனர். அழகே உருவெடுத்து வந்து அக்கினிச்சுவாலை போன்ற சுயம்பிரகாசமான அந்த ஜோதி மக்களின் மன தைக் கவர்கின்றது. கால மாறுபாட்டின் பயனாக, அவைகளில் சில தமது பெருமையையும் விசேடத்தையும் இழந்துவிட்டன. அவற்றிற் கருகாமை யில் புதுக்கோயில்கள் எழுந்து விளக்கமுற்றமையால் பழங் கோயில்களாகிய இவற்றின் புகழ் மங்கியது. ஆகையால் இக்காலத்தில் 12 இலிங்கங்களும் ஒரே படியான புகழ்ச்சி யுடைத்து என்று கூறமுடியாது. இக்காலத்தில் அவற்றுள் சிலவற்றின் உண்மையான இருப்பிடம் இன்னதென்றுகூட கண்டு பிடிக்க முடியாத நிலையிலிருக்கிறது. உதாரணமாக வைத்தியநாதர், நாகே சர் என்னும் இறைவனது பெயர்கள் பல ஜில்லாக்களில் காணப்படுகின்றன. ஆகையால் ஆதியிலெழுந்ததும் 12 ஜோதி லிங்கங்களுள் ஒன்றுமாகிய வைத் தியநாதர் முதலிய லிங்கம் இன்னதென அறிந்துகொள்ள முடியாத நிலையி லிருக்கிறோம். ஒரே இடத்திற்கு பலவகைப் பெயர்களைப் பற்பல நூல்கள் கூறுகின்றன.

இனி, நமது ஆராய்ச்சிக் கெட்டிய அளவு அவ்விலிங்கங்களின் பெயரை யும் பெருமையையும் இருப்பிடத்தையும் பற்றிக் கூறுவோம்.

1. சோமநாதர்:—இது சௌராஷ்டிர தேசத்திலுள்ளதாகக் கூறப்படு கிறது. அதாவது பம்பாய் இராசதானியில் கத்தியவாரைச் சேர்ந்த ஜுனா காட் ராஜ்ஜியத்தின் கடற்கரையில் அமைந்திருக்கிறது. இந்தத் தலம் அசோ கர் முதலிய மௌரிய மன்னர்களாட்சியிலும், விக்கிரமாதித்தன் முதலிய குப் தர்களாட்சி காலத்திலும் மிகவும் சிறப்புற்றிருந்தது. அப்போது அக்கோவி லுக்கு அளவிறந்த செல்வமும் மானியங்களும் இருந்தன. அதிலுள்ள இலிங் கம் மிகவும் பேருரு வாய்ந்தது. அந்தக் கோவிலின் கட்டுக் கோப்பானது அர

சனது சேனைகள் தங்குதற்குரிய ஒரு பெரிய கோட்டையை ஒத்திருந்தது. கி. பி. 1024-ல் ஆண்டில் கஜினி மூகம்மது என்ற மூகம்மதிய அரசன் அக் கோவிலில் ஏராளமான செல்வமிருப்பதாகக் கேள்வியுற்று அந்நகரின் மீது படை யெடுத்தான். எதிர்பாராதவிதமாய் மகம்மதியர்கள் திடீரெனக் கோயிலைக் கைப்பற்றவே ஹிந்துக்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. மூகம்மது கஜினி இந்து மதத்தில் பெரு வெறுப்புடையவ னாதலால் அக்கோயிலிலுள்ள சிவலிங்கத்தை யுடைத்து செல்வமெல்லாம் கொள்ளையடித்துச் சென்றான். அதுபற்றி அவன் "சிலை தகர்த்த வீரன்" என்னும் பெயர் பூண்டான். இருப்பினும், அவன் கோவிலை யழித்துச் சென்றதோடு அக்கோயில் பாழடைந்து விடவில்லை. இன்றும் அக்கோயிலானது அதே இடத்தில் தன் பெருமையில் சிறிதும் குன்றாது சிறப்புடன் விளங்குகின்றது. ஆயிரக் கணக்கான மக்களும் யாத்திரை செய்கின்றனர்.

2. மல்லிகார்ஜுனம்:—இது ஸ்ரீசைலம் என்னும் க்ஷேத்திரத்திலுள்ளது. இவ்வாலயம் கர்நூல் ஜில்லாவிலுள்ள நல்ல மலையின் சிகரத்தில் விசாலமான இடத்தி லமைந்துளது. அம்மலையின் பக்கலில் ஓடும் கிருஷ்ணா நதி அங்கே பாதாள கங்கை யென்றழைக்கப்படுகிறது. மனதைக் கவரும் மாண்புடைத்தாய அம்மலையின் இயற்கை யெழிலும் இனிய பொழிலும் அருகே சலசல வென்றோடும் கிருஷ்ணா நதியின் ஆரவாரமும், மலையுச்சியிலுள்ள மல்லிகார்ச்சுன ராலயத்தின் சித்திரப்பாடான அமைப்பும் ஐம்புலன்களுக்கும் விருந்தளிக்கும் பெற்றிவாய்ந்தவை. அக்கோவிலுள் அமைந்திருக்கும் இலிங்கத்திற்கு மல்லிகார்ச்சுன லிங்கமென்று பெயர். நாகரிகமற்ற வன மக்கள் அதனை "செஞ்சு மல்லையா" எனப் பெயரிட்டு வணங்குகின்றனர். வீரசைவ பஞ்சாசாரியரில் ஒருவராகிய பண்டிதாராத்தியர் இவ்விலிங்கத்தினின்றும் தோன்றி ஸ்ரீசைலத்தில் தனது சிம்மாதனத்தைஏற்படுத்தினர் என்று சுயம்புவாகமம் முதலிய ஆகமங்களின் உத்தர பாகங்களில் கூறப்படுகின்றன. சிவனது அருட்சக்தியின் கூறாய்த் தோன்றிய அக்கமாதேவி என்னும் வீர சைவ மாதுசிரோமணி ஸ்ரீசைல மலைச்சாரலிலுள்ள கதலிவனத்தில் கடுந்தவம் புரிந்து இலிங்கைக்கிய மாயினர் என பிரபுலிங்கலீலை கூறுகின்றது. இத்தகைய பெருமைவாய்ந்த தலத்திற்கு ஆண்டுதோறும் மகா சிவராத்திரிப் புண்ணிய காலத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் யாத்திரையாக வருகின்றனர். ஸ்ரீசைல நாதரைக் கண்டு பிறவிப் பெரும்பயன் எய்தவேண்டுமென்ற பேரவாவினால் அவர்கள் முப்பது மைல் நீளமுள்ள கரடுமுரடான ஒழுங்கற்ற பாதையை, தமக்குறும் வருத்தத்தையும் பொருட்படுத்தாது மூன்று நாட்களில் நடந்து சென்று தரிசனம் செய்கின்றனர். இந்த க்ஷேத்திரமானது மிகப் பழமையானவைகளி லொன்று; ஒரு காலத்தில் சர்வகலா நிலையமாகவும் விளங்கியது. சங்கராச்சாரியரும் வசவேஸ்வரரும் இத்தலத்தை யடைந்து தத்தம் மதக் கோட்பாடுகளை மக்கட்குபதேசித்து தம் மதங்களைப் பரவச் செய்தனர் என்று கூறுகின்றனர். மகாராஷ்ட்ர மன்னருள் மாபெரும் வீரனாய் விளங்கிய சிவாஜி, ஒரு சமயம் ஸ்ரீசைலத்திற்குச் செல்ல நேர்ந்தபோது அங்கு வந்து கூடும் மக்களின் எண்ணிக்கையையும் அவர்கள் இறைவன்பா லன்புபூண்டொழுகும் திறத்தினையும் அம்மலையின் காட்சியையும் கண்டு ஆச்சரியமுற்று துறவுபூண்டு அம்மலைச்சாரலில் வசிக்க எண்ணங்கொண்டான். ஆனால் அவ

னது குலகுருவாகிய ராமதாஸர் அங்ஙனம் செய்யலாகாதென்று தடுத்து விட்டாராம்.

3. மகாகாளம்:—இஃது உஜ்ஜயினியி லுள்ளது. இந்த க்ஷேத்திரம் மத்திய இந்தியாவில் ஒரு சிறந்த புகைரத நிலையமாக (Railway Station) விளங்குகிறது. இவ்வூர் சிப்ரா என்னும் ஒரு ஆற்றின் கரையி லமைந்துளது. பண்டைக்காலத்தி லிருந்த வான நூற்புலவர்கள் பூமத்திய ரேகையை ஆரம்பித்துக் கணக்கெடுத்து பஞ்சாங்கங் கணித்தது இவ்விடத்தில்தான். சிறந்த அரசனும் வானநூல் நிபுணனுமாகிய ஜெயசிங் தன்னுடைய சோதிட உப்பரிகையை (Observatory) இங்குதான் கட்டினன். முகம்மதிய முகலாய அரசர்கள் காலத்தில் யுத்தங்கள் பல இவ்விடத்தில் நடைபெற்றன. ஆகையால் சரித்திர ஆராய்ச்சியாளர்க்கு இவ்வூர் மிகவும் முக்கியமானது. விக்கிரமாதித்யனைப் பற்றிக் கர்ணபரம்பரையாகக் கூறப்படும் கதைகள் இங்குதான் நிகழ்ந்ததாகக் கூறப்படுகின்றன.

4. ஒங்காரம்:—இதன் இருப்பிடம் மத்திய மாகாணத்தைச் சேர்ந்த மாந்தாதாபுரி. இது நிமூர் ஜில்லாவில் நர்மதா நதியிலுள்ள ஒரு தீவு. இத்தீவிலுள்ள இலிங்கத்திற்கு ஓங்கார இலிங்கமென்று பெயர். நர்மதையின் தென்கரையில் அமலேஸ்வரம் என்ற வேறொரு கோயில் இருக்கிறது. இவ்விரு லிங்கங்களும் சமமான முறையில் வணங்கப்படுகின்றன. இத்தீவானது மாந்தாதா என்னும் அரசனால் பெயரிடப்பட்டது. இவையே யன்றி அங்கே சமணப் பள்ளிகளும் மாலோன் கோயிலும் காணப்படுகின்றன. "ஓம்கார்ஜீ" எனும் மிகப் பெரிய சந்தை யொன்று ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் 15-ந் தேதி யன்று நடைபெறுகிறது. ரஜபுதனம்—மால்வா இருப்புப் பாதையிலுள்ள "மார்ட்டகம்" என்னும் ஊர் மாந்தாதாபுரிக்குச் சமீபமான புகை வண்டி நிலையம்.

5. வைத்தியநாதர்:—இவ்விலிங்கம் அமைந்திருக்கும் ஆலயம் பாரலி எனு மூரிலுள்ளதென்பர் ஒரு சாரார். மற்றும் சிலர் அவ்விடம், இந்தியாவின் வடகிழக்குப் பாகத்திலுளதென்பர். தென்னாட்டார் அவ்விலிங்கம் அமைந்துள்ள இடம் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த வைத்தீஸ்வரன் கோவில் தான் (புள்ளிருக்கும் வேளூர்) என்று கூறுகின்றனர். வடநாட்டிலே வைத்தியநாதர் என்னும் பெயரையுடைய 5 கோயில்கள் பற்பல இடங்களி லுள்ளன. அவற்றிலிரண்டு சாந்தல் மாகாணத்திலும், ஒன்று பர்துவானிலும் ஒன்று அல்மோராவிலும் காங்கரில் ஒன்றும் அமைந்துள்ளன. சிவனது பெருமையையுணர்த்தும் சிவபுராணம் இவ்விலிங்கம் இமயமலைச்சாரலில் தென்பக்கமிருப்பதாகக் கூறுகிறது. இயக்கர்குலத் தலைவனும் இராவணன் இடையறாது இயற்றிய சிவபூசையின் பயனாக கொன்றை வேணிப் பெருந்தகையின் இருப்பிடமாகிய கைலையைப் பெயர்த்தான் என்பது அனைவரு மறிந்ததே. இவ்விலிங்கமே இராவணனுக்கு அத்தகைய வரத்தையும் வீரத்தையும் அளித்ததென்பர்.

6. பீமசங்காம்:—இது பூனா ஜில்லாவில் கேது தாலுக்காவி லுள்ள பாவர்க்கிரி என்னும் ஊரிலுள்ள ஒரு உன்னதமான கோட்டையி லமைந்திருக்கிறது. இக்கோயில் சமுத்திர மட்டத்திற்குமேல் 3448 அடி உயரத்திலிருக்

கிறது. அவ்விடத்தினின்றும் சந்திரபாகை அல்லது பீமநதி என்ற ஆருனது உற்பத்தியாகிறது. மேற் கூறப்பட்ட சுலோகம் தாகினி, சாகினி எனு மிருவர் அவ்விலிங்கத்தைப் பூசித்ததாகத் தெரிகிறது. பண்டைக் காலத்தில் அங்கு மலைவாசிகள் குடியிருந்திருக்க வேண்டுமெனக் கூறப்படுகிறது.

7. இராமநாத லிங்கம்:—இவ்விலிங்க மிருக்கும் க்ஷேத்திரமாகிய இராமேஸ்வரத்தை இந்துக்களில் அறியாதவர் ஒருவருமில்லை. இது தென்னிந்தியாவுக்கும் இலங்கைக்கும் நடுவிலுள்ள மன்னுர் குடாவில் ஒரு தீவாக அமைந்திருக்கிறது. இராம ராவண யுத்தத்தில் ஆயிரக்கணக்கான வீரர்களைத் தான் கொன்ற பாவத்தைப் போக்க, இராமன் இந்த லிங்கத்தை ஸ்தாபித்து வணங்கினன். திருமாலே சிவபெருமானை வணங்கிய ஸ்தலமாதலின் மக்கள் சைவர் வைணவர் என்ற வேற்றுமை யுணர்ச்சியை விடுத்து ஆண்டுதோறும் கணக்கற்ற மக்கள் இத்தலத்திற்குச் செல்லுகின்றனர். இராமேச்சுரம் செல்லும் மக்கள் சேதுஸ்நாநம் செய்யவேண்டுமென ஒரு நிபந்தனையுண்டு. சேது என்பது இராமரால் இலங்கைக்கும் தென்னிந்தியாவுக்கும் மத்தியில் கடலில் கட்டப்பட்ட ஒரு பாலம். தென்னுட்டார் காசிக்குச் செல்வதை எவ்வளவு முக்கியமாகக் கொள்ளுகின்றனரோ அதேபோல் வடநாட்டார் இராமேஸ்வர யாத்திரையை முக்கியமாகக் கருதுகின்றனர். இக்கோயில் பண்டைக்காலத் தமிழரின் சிற்பத் திறமையை விளக்கிக் காட்டுகிறது. இது மிகப் பெரிய கோயிலாதலாலும் புராதனமான தாதலாலும் ஏராளமான மானியங்களும் ஆஸ்தியும் இருக்கின்றன. அது மிகவும் மணற்பாங்கான இடமாகலின் அங்கே தென்னை மரங்கள் விசேஷமாய் பயிராகின்றன.

8. நாகேசம்:—இது தாருகாவனத்தி லிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதுவே தென்னுட்டில் நாகநாதம் என்று வழங்குகிறது. நாகத்தையுடைய இலிங்கங்கள் இந்தியாவில் 10 இடங்களில் இருக்கின்றமையின் உண்மையான இடம் எது என்று கண்டுபிடிக்க முடியவில்லை. திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள சங்கர நயினர் கோவில் என்ற விடத்திற்கு தாருகாபுரம் என்ற மற்றொரு பெயருமுண்டு. நாகத்தினல் பிரதிட்டை செய்யப்பட்ட இலிங்கங்கள் தஞ்சை, சேலம், திருநெல்வேலி, செங்கற்பட்டு, திருவாங்கூர் முதலிய ஜில்லாக்களில் காணப்படுகின்றன. இந்த ஸ்தலத்தைப்பற்றி சில புராணத்திலோர் வரலாறுண்டு. செருக்குற்றிருந்த தாருகா முனிவர்களது பத்தினிகளை சிவபெருமான் கற்பழித்தான் என்பதைக் கேள்வியுற்ற அவர்கள் ஆருச சீற்றங்கொண்டு பெரிய யாகம் செய்து யானை, புலி, நாகம் முதலியவற்றை சிவன்பால் ஏவினர். அவற்றைச் சிவன் இடைகரு ஆடை முதலியனவாகக் கொண்டான் என்று அந்நூல் கூறுகிறது. இவ்விடத்தில்தான் இச்சம்பவம் நடந்ததாகச் சிவபுராணம் கூறுகின்றது.

9. விஸ்வநாதர்:—இவ்விலிங்கம் காசியிலிருப்பதை பாலர் முதல் விருத்தர் வரை யாவரு மறிவர். இது கங்கைக் கரையில் பரந்த சமவெளியில் மிக செழிப்பான இடத்தில் உள்ளது. திருவாரூரில் பிறக்கின் முத்தி யெனவும், சோணகிரியை நினைப்பின் முத்தி யெனவும், காசியில் இறந்தால் முத்தியெனவும் ஹிந்து சாஸ்திரங்கள் கூறுவதால் ஒவ்வொருவரும் காசியி லிறக்க முயலுகின்றனர். கணக்கிற்கெட்டா காலம்முதல் இது சிறந்த யாத்திரா ஸ்தலமாகவும், வடமொழி முதலிய பாஷைகளை வளர்க்கு மிடமாகவும் விளங்கு

கிறது. புத்தர்களுக்குச் சிறந்த ஸ்தலமாகிய சாரநாதம் காசிக்குச் சமீபத்தில் தானிருக்கிறது. ஹிந்துவாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் காசி விஸ்வநாதரை அன்போடு வழிபடுகின்றனர்.

10. திரியம்பகம் :—இது நாஸிக் க்ஷேத்திரத்திற்கு மேற்கே 20 மைல் தூரத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைச் சாரலில் கோதாவரி நதிக்கரையில் மிகவும் செழிப்பான இடத்தி லமைந்திருக்கிறது. இங்கே பன்னிரு ஆண்டு கட் கொருமுறை சிம்ம லக்கினத்தில் குரு உச்ச பதவி யடையும்போது மிகச் சிறந்த திருவிழா நடைபெறுகிறது.

11. கேதாரம் :—ஐக்ய மாகாணங்களில் கன்வால் ஜில்லாவில் இமய மலையின்மேல் அமைந்திருக்கிறது. இக்கோயிலின் சிகரமானது பனியினால் மூடப்பட்டு சமுத்திர மட்டத்திற்கு மேல் 22853 அடி உயர்ந்திருக்கிறது. பஞ்சகேதாரம் என்ற ஐந்திடங்களில் சிவபெருமான் தன் சக்தியின் பல கூறு களை அங்கங்கே விடுத்துச் சென்றதாகவும் அவற்றுள் திருக் கேதாரமே தலை சிறந்தது எனவும் கூறப்படுகின்றது. இவ்வாலயத்தின் சமீபத்தில் பைராப் ஜம்ப் (Bhairab Jamp) என்ற ஒரு பெரிய செங்குத்தான பாறை யிருக் கிறது. பண்டைக் காலத்தில் பௌத்தர்கள் அங்கு வந்து கோவில் ஏற்படுத்தி வணங்கி மோக்ஷ மடைவதற்காக அப்பாறையின் உச்சியிலிருந்து கீழே விழு ந்து இறந்துவிடுவது வழக்கமாம். ஆனால் அப்பழக்கம் இப்போது நின்று விட்டது.

12. கிருஷ்ணேசம் :—இது ஈளாபுரி எனுமிடத்தில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் அந்த இடம் இன்னதுதான் என்று அறிந்து கொள்ள முடியாத நிலையி லிருக்கிறது. இராமாயணம் உத்தர காண்டத்தில் இமய மலைச் சாரலில் ஈளன் என்பான் ஒருவன் சிவபெருமானைப் பூசித்ததாக ஒரு வரலாறு காணப்படுகிறது. ஆகையால் இது இமயமலைப் பிரதேசத்தி லுள்ள ஸ்தலங்களி லொன்றாக இருத்தல் கூடும். இந்த க்ஷேத்திரத்தைப் பற்றிய மற்ற வரலாறு ஒன்றும் புலப்படவில்லை.

இதுகாறும் கூறிவந்த ஜோதி மயமான பன்னிரு லிங்கங்களே யன்றி உப லிங்கங்கள் பன்னிரண்டுள்ளன. ஆனால் அவைகள் எங்கெங்கே இருக் கின்றன என்பதை அறிவது அசாத்தியமாக இருக்கிறது.



# ஆபுத்திரன் வரலாறு

(பே. ராமாநுஜம்.)

## 6. உண்ணும் சோற்றில் மண்ணிடல்

ஆபுத்திரன் பொழுது புலர்வதற்குள் வயனங் கோட்டிற்கு அப்பால் பல காவதம் கடந்து ஓர் சிற்றூரை யடைந்தான். மறையவர்கள் மட்டும் வதியும் ஊர் அச்சிற்றூர். வேள்வியின் பொருட்டு முதல் நாள் இருந்த பட்டினியாலும், அன்றிரவு நேர்ந்த அத்துன்பங்களாலும் அயர்ச்சி மிகுந்து, அச்சிற்றூரின் அம்பலத்தே படுத்து உறங்கினான். தன்னை மறந்து துயிலில் மூழ்கிய ஆபுத்திரன் நெடுநேரம் கழித்து எழுந்தான். பட்ட அடிகளால் உடல் வலியும், பட்டினியால் பசித்துயரும் வருத்த ஆபுத்திரன் எழுந்து நடக்கவும் இயலாதவனாய், அம்பலத்திலேயே தங்கியிருந்தான். அவ்வழியே வந்த ஒரு பார்ப்பன முதியவர் அயர்ச்சியால் குழிந்த கண்களும் மெலிந்த உடலும் உடைய ஆபுத்திரன் ஊர் அம்பலத்தே சோர்ந்து வீற்றிருத்தலைக் கண்டு, அவனை யடைந்து "தம்பி, நீ யார்?" என்று வினவினார். "தந்தையே! நான் ஓர் ஏழைச் சிறுவன்; என்னால் இது பொழுது பேச முடியவில்லை. பருகுவதற்குச் சிறிது நீர் கொடுத்தால் பெரும் புண்ணியமாகும். எளியனது வரலாற்றைப் பின்னர் கூறுகின்றேன். ஆண்டிற் சிறிய பாவியேன் தங்கட்குத் துன்பம் தரவும் ஆனேனே" என்று கூறி வருந்தினான் ஆபுத்திரன். அவனுடைய சொல் நயமும் உடல் மெலிவும் கருதி மனம் இரங்கிச் சென்று நீர் கொணர்ந்து கொடுத்தார். இளைஞன் ஒருவாறு சோர்வு நீங்கித் தன் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறினான். துன்பம் நிறைந்த அவன் வாழ்க்கையைக் கேட்டு இடையிடையே பரிவு காட்டிவந்த பெரியவர் இறுதியில் வேள்வியை இகழ்ந்து ஆவைக் கவர்ந்ததும், அதனால் ஒரு மறையவர் பெருந்துன்பம் உற நேர்ந்ததும் அறிந்தவளவில் வலிமிகுந்த உடற்கட்கு வாய்ந்த ஓர் இளைஞனைப் போல் துள்ளி யெழுந்தார். "பாவி வேள்வியை இகழ்ந்தனையா? வேள்விக்குரிய ஆவைக் கவர்ந்தாயா? ஐயோ! உன்னால் ஒரு உத்தமர் உயிர் துறக்கவும் நேர்ந்ததா? கீழ் மகனே! நீ இவ் வம்பலத்தில் இருத்தலும் தகாது. எழுந்திரு, எழுந்திரு; ஐயோ! அறியாமல் உனக்கு நீர் கொடுத்துப் பாவத்தைத் தேடிக் கொண்டேனே" என்று பதறினார். அப்பார்ப்பன முதியவர் வேதம் முதலிய மெய் நூல்களை ஓதித் தெளிந்தவராயினும், உயிரைக் கொன்று வேள்வி புரிதல் குலத்திற்கு உரிய ஒழுக்க மென்று நினைத்தும், வேள்வியாசிரியர்க்குத் தற்செயலாக நேர்ந்த துன்பத்தை ஆபுத்திரனால் நேர்ந்தது என்று பிறழ வுணர்ந்தும், அறப்புதல்வனும் ஆபுத்திரனைக் கோபித்துக் கடிந்தனர் என்றால் அவ்வறிஞர் சால்பு என்னும்? ஆபுத்திரன் மறுமொழி ஒன்றும் கூறாது அவ் ஊரை நீங்கி, அதற்கு அருகில் இருந்த மற்றொரு கிராமத்தை அடைந்தான்.

அக் கிராமத்தில் வேதியரும் வேளாளரும் வேறு சிலரும் வதிந்து வந்தனர். ஆபுத்திரன் வேளாளர் தெருவையடைந்து, ஒரு வீட்டு முற்றத்தில் நின்று, "அன்னாய்! பசித்துயர் வருத்துகின்றது; ஒரு பிடி சோறு போடுங்கள்" என்று வேண்டினான். வீட்டினின்று ஓர் பெண்மணி வெளியில் வந்து இரவலன் நிலைமையைக் கண்ணுற்று மனம் இரங்கி, "தம்பி, உனது தோற்றமும் பிறவும் உயர்ந்த நிலையில் வாழ்ந்தவனாகக் காட்டுகின்றனவே; உனக்கு எதனால் இத்தகைய நிலைமை வாய்த்தது?" என்று கேட்டாள். "தாயே! யான் என்றும் ஏழ்மை நிலைமையில் இருப்பவனே; தோற்றத்தால் ஒருவனை மதிப்பது தகுதியன்று" என்றான் ஆமகன்.

"எனது வீட்டில் சோறில்லை; கூழ்தான் உளது; அதை ஊற்றுவதற்கும் உன்னிடத்தில் பாத்திரம் ஒன்றும் இல்லையே."

"எனது இருகையையும் இணைத்துப் பருகுவேன், ஊற்றுங்கள்."

அப்பெண் தெய்வம் அவன் நிலைமைக்கும் குணநலத்திற்கும் மனம் உருகி தனது வீட்டில் இருந்த புது மட்கலம் ஒன்றில் கூழ்வார்த்து, "தம்பி, இக் கூழைப் பருகிவிட்டு இந்தக் கலத்தையும் எடுத்துச் செல்; உனக்கு உதவும்" என்று கூறினாள். அவன் அதைப் பசி நீங்கப் பருகிக் கலத்தை எடுத்துக் கொண்டு சென்றான். அதற்குள் அவ் ஊரிலும், அதற்கு அடுத்த பல கிராமங்களிலும் இவன் "ஆகவர் கள்வன்" என்ற பெயர் பரவியது. மறுநாள் ஆபுத்திரன் வேறு ஒரு கிராமத்துட் புகுந்து பிச்சை கேட்டான். வேளாளர் வீடுகள் தோறும் சிறிது சோறு கிடைத்தது. பின்னர் பார்ப்பனர் தெருவிற் சென்றான். ஐயோ! அவர்கள் அனைவரும், "இவன் பசுவைக் கவர்ந்த திருடன்" என்று சோறு இருந்த கலத்தில் மண்ணை அள்ளிப் போட்டனர். உண்ணும் சோற்றில் மண்ணைப் போடுதல் எத்தகைய செயலாகும்? தன்னைக் கள்வன் என்றும், தீயவன் என்றும் இகழ்வதோடு நில்லாது உண்ணுங் கலத்தில் மண்ணையும் போடத் தொடங்கினராயின் அவன் மனம் என்ன துயர் அடையும்? எனினும், இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் இயல்பினன் ஆதலின் ஆபுத்திரன் இத்தகைய செயல்களால் மனம் ஒடிந்து போகவில்லை.

அறநெறி யுணர்ந்த ஆபுத்திரன் பிறர் செய்யும் துன்ப மெல்லாம் இன்பம் எனக் கொண்டனன். எனினும், இனி அப் பக்கத்து கிராமங்களில் வாழ அவன் மனம் ஒப்பவில்லை. எனவே, அங்கிருந்து நீங்கிச் செல்வத்திற் சிறந்தோர் வாழும் மதுரையம்பதியை நோக்கிச் சென்றான்.

## 7. அமுத சுரபி

செந்தமிழ் நாடெனும் சீர் மிகப் படைத்தது பாண்டிய நாடு. மலை, கடல், நதி இவற்றின் வளம் ஒருங்கே பெற்றது பாண்டிய நாடு. கருணைக் கடலாகிய இராமபிரான் இலங்கை செல்லும் பொழுது சில நாள் தன்னகத்தே தங்கியிருக்கும் பேறு பெற்றது பாண்டிய நாடு. இங்ஙனம் பழமையும் பெருமையும் பெற்ற பாண்டிய நாட்டில் ஒப்புயர்வற்ற புலவர்கள் ஒருங்கு கூடித் தமிழாராய்ந்த சிறப்பு வாய்ந்தது மதுரைமாநகர். வையை யென்னும் தெய்வமாநதி தன் மருங்கே செல்லும் வளம் பெற்றது. அந்த ஆறு இன்று போலன்றி, அந்தப் பழங்காலத்தில் வற்றாத நீரோட்டம் உடையதா யிருந்

தது. அதில் மீன் போலவும், அன்னப் பறவை போலவும் பல்வேறு வடிவம் உடையனவாகச் செய்யப்பட்ட ஓடங்கள் மக்களையும் பல்வகைப் பொருட் களையும் ஏற்றிக் கொண்டு இங்கும் அங்குமாகச் சென்ற வண்ணமா யிருக்கும். மலர் விற்போர், பஞ்சவாசம் விற்போர், பட்டு நூல், எலிமயிர், பருத்தி நூல் முதலியன நெசவு செய்யும் பட்டுச் சாலியர், நெல் முதலிய விற்போர், அப்ப வாணிகர், மீன் விற்கும் பரதவர், உப்பு விற்கும் உமணர், கயிறு திரிப்போர், வெண்கலக் கன்னர், செம்பு வேலை செய்வோர், மரவேலை செய்யும் தச்சர், இரும்பு வேலை செய்யும் கொல்லர், ஓவியக் காரர், உருக்குத் தட்டார், இரத் தின வேலைக்காரர், நெட்டி முதலியவற்றால் மலர் வாடாமாலை முதலியவற் றைச் செய்யும் தொழிலினர், தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக் கருவிக ளில் பாட்டு இசைக்கும் பாணர், சங்கு அறுப்பவர், முத்துக் கோற்போர், மறையோர், மருத்துவர், சோதிடம் வல்லோர் முதலிய எண்ணிறந்த தொழி லினர், பிரிவினர் ஆகிய மக்கள் அம் மதுரைமா நகரில் நிறைந்திருந்தனர். தெய்வ மணமும், செல்வப் பெருக்கும் உடைய அம் மதுரைமா நகரில் கலை மகள் நிலயம் என ஓர் கோவில் உளது. அது சரசுவதி தேவியின் கோவில். அம் வம்மைக்குச் சிந்தா தேவி எனவும் பெயர். சிந்தாதேவி என்பதற்குச் சிந்தையில் தோன்றிச் சொற்பொருள் உணர்த்துபவள் என்பது பொருள். அக் கோவிலின் முன்னர் அம்பலம் ஒன்று உளது. அவ் வம்பலத்தே குருட ரும், செவிடரும், கால் கை முதலிய உறுப்பிழந்தவரும், ஆதரவற்ற பிணியா ளரும் நிறைந்திருந்தனர். அவர்கள் அனைவர்க்கும் ஆபுத்திரன் தன் கையில் ஏந்திய மட்கலத்தில் இருக்கும் சோற்றுத் திரளை அள்ளிக் கொடுத்து, அவர் கள் பசியை ஆற்றிக் கொண்டிருந்தான். "தான் உண்பதற்கே சோறில்லா மல் வருந்திய இவனுக்குப் பிறர் பசி தணிக்கச் சோறு ஏது?" என்ற ஐயம் இங்கு எழலாம். ஆபுத்திரன் வீடுதோறும் இரந்து உண்டு வருகையில், ஒருநாள் கலைமகள் கோவிலுக்கு முன் உள்ள அம்பலம் அடைந்தான். அங்கே முற்கூறிய அவ் வெளியவர்கள் நடக்கவும் இயலாதவர்களாய் உணவு இல்லா மல் பசியால் வருந்துவதைக் கண்டான். "அந்தோ! இவ்வளவு மக்கள் உணவின்றி வருந்துகின்றனரே" என மனம் இரங்கி, அன்று முதல் வீடு தோறும் சென்று வாங்கி வந்த உணவை முதலில் அனைவர்க்கும் வழங்கிப் பின்பு மிகுந்ததைத் தான் உண்டு, இரவு தோறும் கலைமகள் கோவிலின் ஓர் பால் மட்கலத்தைத் தலையணையாகக் கொண்டு துயின்று வந்தான்.

இங்ஙனம் ஆபுத்திரன் "காணார், கேளார், கால் முடமானோர், பேணு நர் இல்லோர், பிணி நடுக்குற்றோர்" போன்ற எளியவரின் பசியைத் தணித்து வந்தான். இச் செயலால் இவன் பெயர் அவ்வளவு பெரிய மதுரை நகர் மட்டுமன்றி அக்கம் பக்கத்து கிராமங்களிலும் பரவத் தொடங்கியது. பிச் சைக் காரர்கள் மட்டுமன்றி மற்றைய மக்களும் அவன் குணத்தைப் புகழ்ந்து பேசினர்.

ஒருநாள் இரவு நாழிகை பதினைந்து இருக்கும். எங்கும் திணிந்த காரிருள். அன்று பொழுது மறைந்ததும் மேகங்கள் எல்லாம் ஒன்று கூடி மின்னி இடித்துப் பெய்த பெருமழை அப்பொழுது தான் நின்றது. மழை நின்றதாயினும் மின்னல் ஒளியும், இடி யொலியும் நிற்க வில்லை. தான் உண்பதற்கே ஒரு பிடி சோறில்லாத ஒருவன் மற்றைய ஏழைகளின் பசியைத் தீர்த்துவரும் புதுமையைக் கேள்வியுற்று, அத்தகைய பெருமகனை

நேரே காண விரும்பித் தேவர்கள் ஏறிவரும் தேர் ஆகாய வீதியில் விரைந்து வருகையில் எழும் பேரொலி போலும் அவ்விடியொலி! அவர்கள் மெய் ஒளியே போலும் அம்மின்னல்! மீண்டும் மழைபெய்யத் தொடங்குவது போல மின்னல்மின்னி இடியிடிக்கும் அக்காரிருளில் சிலர் "கலைமகள் நிலயம்" என்னும் சரசுவதி கோவிலின் மன்றத்துட் புகுந்து, "பேரருள் உடைய ஐய! வழி நடையால் களைப்புற்றிருக்கிறோம்; பசித்துயர் எங்களை வருத்துகின்றது; கருணை கூர்ந்து பசியை ஆற்றவேண்டும்" என்று அரற்றினர். நள்ளிரவில்—பேய்களும் வெளிவர அஞ்சும் அக்காரிருளில்—ஏழ் கடலும் மேல் எழும்பி விழுவதுபோலப் பெருமழை பெய்துநின்ற அச்சமயத்தில் சிலர் ஆமகன் தன்னை மறந்து உறங்கும் அவ்வம்பலத்தே வந்து "பசி களையவேண்டும்" என இரந்தனராயின் நாம் என்னவென்று நினைப்பது! முன்பு இடியொலியைத் தேவர்களின் தேர் ஒலியென்றும், மின்னலை அவர்களுடைய மெய்யொளி யென்றும் ஐயுற்றோ மல்லவா? அத்தேவர்கள் தான் இவ்வாறு மக்கள் உருவங்கொண்டு நள்ளிரவில் ஆபுத்திரனைச் சோதிக்க வந்தனர் போலும்! எவ்வாறாயினும் ஆபுத்திரனது அறச்செயலுக்கு இது ஒரு சோதனைக்காலமே. இத்துன்ப ஒலியைக் கேட்ட ஆபுத்திரன் "பொருக்கென" எழுந்தான். எழுந்தவன் வந்தவர்கள் இன்னவரென்பதும், எது கருதி வந்தனரென்பதும் அறியானாகி, "ஐயன்மீர்! கடுங்காற்றும் பெருமழையும் கலந்து வீசிய இக்காரிருளில் தங்கட்கு என்ன நேர்ந்தது?" என்று வினவினான்.

"அன்புருவே! நாங்கள் இம்மதுரை நகருக்கு அப்பால் நெடுந்தூரத்தேயுள்ள ஓர் சிற்றூரில் வாழ்பவர்கள். ஒரு தொழிலைக்கருதி இந்நகர் நோக்கி வந்த நாங்கள் பொழுது அமருங்காலை இந்நகர் அடைந்தோம். அப்பொழுதே சிறு தூறலாக மழைபெய்யத் தொடங்கியது. அந்த மழைக்கு இக்கோவிலின் முன்னுள்ள அம்பலத்தே தங்கினோம். மழை நின்றுவிடும் என்று ஒவ்வொரு நாழிகையும் எதிர்பார்த்தோம். அந்தோ! நாழிகைக்கு நாழிகை மழை முன்னினும் பலமாகப் பெய்யத் தொடங்கிற்று! என் செய்வோம்? நெடுந்தூரம் நடந்து வந்தமையால் உண்டான நோவு ஒருபாலும், பசித்துயர் மற்றொருபாலும் வருத்தத் தொடங்கியது. அவ்வம்பலத்தில் உள்ள ஏழை மக்கள் எங்கள் நிலைமைக்கு இரங்கி, 'கலைமகள் கோவிலில் தன்னுயிரைக் காட்டிலும் மன்னுயிர் பெரிதென்று கருதி வதியும் ஓர் அறமகன் இருக்கின்றார்; அவரிடம் சென்றால் உங்கள் பசித்துயர் ஒழியும்' என்றனர். ஐயா, அதற்கு முன்னரே தங்கள் பேரன்புச் செயலைக் கேள்விப் பட்டிருக்கின்றோம்; இதுபொழுது எங்களை வருத்தும் பசித்துயரை ஒழித்தல் பெரும் புண்ணியமாகும்" என்று அவர்கள் வேண்டினர். ஆபுத்திரன் யாது செய்வன்? வீடுதோறும் சென்று வாங்கிவந்த உணவை எளியோர் பலர்க்கும் வழங்கி, மிகுந்ததைத் தான் உண்டு, பிச்சை ஓட்டினைக் கழுவித் தலைக்கு அணையாக வைத்து உறங்கிய அவன் அந்நள்ளிரவில் அவர்கள் பசியை எவ்வாறு நீக்குவன்? வழியொன்றும் அறியானாகி, "அன்னையே! இவர்கள் உற்ற துயரை நீதான் நீக்கியருள வேண்டும்; அடியனது மட்கலத்தில் ஒரு சிறு பருக்கையும் இல்லை; ஏற்றூண் அல்லது வேற்றூண் இல்லா எளியேன் என்பதை இவர்கள் அறியாது என்பால் உணவுவேண்டி நிற்கின்றனர். இந்நடு இரவில் எங்கு சென்று உணவுகொண்டு வருவேன்?" என்று அக்கோவிலில் எழுந்தருளி

யுள்ள கலைமகளை மனதில் பலவாறு துதித்துக் குறையிரந்து நின்றான். என்ன வியப்பு! அன்னமென, மின்னலென ஓர் பெண்ணரசி தோன்றினாள். அக் காட்சி ஆமகன் கண்களுக்கே புலனாயிற்று. "தாயே! வாழிய நின்மலரடிகள்; வளர்க நின் மெய்க்கீர்த்தி," என்று வணங்கினான். அப்பொற்கொடிபோல் வாள், "மகனே! வருந்தேல்; நினது மனக்குறை நீங்க ஓர் மட்கலம் தரு கின்றேன்; அக்கலத்தினின்று உணவு எடுக்குந்தோறும் வளர்ந்துகொண்டே இருக்கும்; நாடு முழுவதும் வறுமைப்பிணியால் வருந்த நேரினும் இவ்வோடு வறுமையடையாது. இக்கலத்தில் உள்ள உணவைக்கொண்டே இந்த நாட் டில் வாழும் அனைவரின் பசியையும் நீக்கலாம். அவர்கள் அனைவரும் 'போ தும், போதும்' என்று தங்கள் மனநிறைவை வெளியிடும் வரை உணவு வளர்ந்துவரும்; ஆதலின் இவ் வோட்டினைக்கொண்டு இவர்கள் அடைந்த துயரை நீக்குவாய்; இவ்வோட்டின் பெயர் 'அமுத சுரபி' என்பது; இத னைப் பெறுக" என்று கூறித் தன்கையில் இருந்த கலத்தினை அவன் கையில் தந்தாள். ஆபுத்திரன் அதைப் பெருமகிழ்வோடு குனிந்து வாங்கி,

"சிந்தா தேவி! செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே! நாமிசைப் பாவாய்!
வானோர் தலைவி! மண்ணோர் முதல்வி!
ஏனோர் உற்ற இடர்களைவாய்!"

என்று பலவாறு துதித்து வணங்கினான். வழி நடையாலும் பசித் துய ராலும் உடல்மெலிந்து ஆமகனை யடைந்தவர்கள் இத்தெய்வக் காட்சி யைக் காணார்; அத்தெய்வம் பேசிய மொழிகளும் அவர்கள் செவிப்புலனுக்கு எட்டவில்லை. எனினும் வறிய மட்கலம ஒன்று கீழே கிடக்க, முல்லைமல ரைப்போன்ற வெண்மை நிறமுடைய சோறு நிறைந்த வேறு ஒரு புதிய மட்கலத்தை ஆபுத்திரன் கையில் ஏந்திக் கலைமகளைத் துதிப்பதைக் கண்டு வியப்புற்றனர். பின்னர் ஆமகன் தன் கையகத்துள்ள சிறிய கலத்திலிருந்த உணவைக்கொண்டு அவர்கள் அனைவரின் பசித்துயரை ஒழித்தான். பசி தீர்ந்த அவர்கள், "இவ்வொரு சிறு கலத்திலிருந்தே நம் அனைவரின் பசியை ஒழித்தும், முன்புபோலவே அக்கலம் நிறைய தூய வெள்ளிய சோறு இருக் கின்றதே" என வியப்பு மிக்கனர். "உண்மையில் இவன் மாநுடன் அல்லன், தேவனே" என்று கருதி அச்சமும் பத்தியும் மேலிட்டவராய் அவனை வணங்கி, "ஐயனே! தங்கள் பெருமையில் ஒரு சிறுபகுதியையும் நாங்கள் உணரோம்; இதுபொழுது நீங்கள் செய்த உதவிக்கு சிறு மாநுடராகிய நாங் கள் யாதுசெய்ய வல்லோம்?" என்று போற்றினர். அது பொறாத ஆமகன் "பெரியீர்! எளியேன் புதுமை யொன்றும் செய்யவில்லையே; யான் அசுர னும் அல்லன், தேவனும் அல்லன்; ஒரு சிறு மாநுடனே; இங்ஙனமாக எனக்கு உள்ள பெருமை யாதோ? அடியேன் தங்களைக் காணும்பேறு பெற்றமையினாலேயே பாவியேன் புனிதனானேன். உலக அன்னையின் ஒப் புயர்வற்ற காட்சி இன்று ஏழையேன் காணப்பெற்றேன்; அப்பெருமாட்டி பவளவாய் திறந்து கூறிய அமுதமொழிகளைக் கேட்கவும் பெற்றேன்; அத் துடன் இத்தெய்வத் திருக்கலத்தையும் பெற்றேன். இவ்வரும்பேறு தங்களா லேயே கிடைத்தது. ஆதலின் யானே தங்கட்கு என்றும் கடமைப்பட்ட

வன்'' என்று கூறி அவர்களை மகிழ்வித்தான். அன்றிரவு அவர்கள் அம்பலத்திலேயே ஆமகனோடு தங்கியிருந்து புலரியில் எழுந்து சென்றனர்.

ஆமகன் அவர்கட்குச் செய்த உதவி சிறிதெனினும் துன்பம் நேர்ந்த காலத்துச் செய்தமையால் மிகப் பெரிதாகும். அன்றியும் ஒருவன் செய்த சிறிய உதவி மேன்மக்கட்குச் செய்யப் பட்டதாயின், அது அகன்று பரந்த ஆகாயத்தினும் பெரிதாகிப் பரவி வளரும்.

''தான் சிறிதாயினும் தக்கார் கைப்பட்டக்கால்
வான் சிறிதாப் போர்த்து விடும்''

என்ற ஆன்றோர் மொழி அதனை நன்கு புலப்படுத்தும். ஆகமன் உயர் குணங்கள் வாய்ந்த உத்தமன் என்பதை நாம் அறிந்துள்ளோம்; அவனால் பசி தீர்ந்து சென்ற வழிநடையாளர்களும் நல்லவர்கள் என்பது, அன்றிரவு ஆமக னோடு சிறிது பொழுது உரையாடியதி லிருந்து புலப்படும். இங்ஙனம் உதவி செய்தவனும், செய்யப் பெற்றவர்களும் ஆகிய இருவகையினரும் நல்லவ ராகவே அவ்வுதவி இம்மண்ணுலகமும், விண்ணுலகமும் சிறிதாகுமாறு வளருமன்றோ? அப்புதுமையை நாம் இனி காண்போம்.

ஆபுத்திரனால் பசிதீர்ந்து, புலரியில் எழுந்து சென்ற அவர்கள் வழியில் காணும் அனைவரிடத்திலும் ஆபுத்திரனது அருட் பெருக்கையும், பிறஉயர்ந்த குணங்களையும் பாராட்டிப் பேசி, அன்று இரவு தங்கள் பசியை நீக்கிய புது மையையும், அவன் பெற்றுள்ள 'அமுத சுரபி' என்னும் தெய்வத்திருக்கலத் தின் பெருமையையும் விதந்து கூறிச்சென்றனர். அவ்வழி நடையாளர் களால் அச்செய்தியைச் செவிமடுத்தவர்கள் தங்கட்கு அறிமுகமானவர்க ளிடத்திலும், மற்றவர்களிடத்திலும் கூறினர். இங்ஙனம் அன்று பகலி லேயே மதுரைப் பட்டினத்திலும், அதனையடுத்த சிற்றூர்களிலும் ஆபுத்தி ரன் பெயரோடு அமுத சுரபி என்னும் பெயரும் உலாவத் தொடங்கிற்று. இனி கேட்க வேண்டுமா? உலக முழுவதும் ஒரு குடைக்கீழ் ஆளும் மன்னவனாலும் இயற்றவியலாத அறவேள்வி ஆபுத்திரன் செய்யத் தலைப்பட் டான். அவ்வேள்விக்கு உரிய அதிதிகளாக மதுரைமாநகரில் உள்ள கூன் குருடர் செவிடரன்றி, அந் நகர்க்கு அருகிலும், அதற்கு நெடுந்தூரத்திலும் உள்ள கிராமங்களில் இருக்கும் உடற்குறைவினரும் பிணியாளரும் வந்து சேர்ந்தனர். அம்பலத்தில் உண்போர் ஒலி மிகுந்தது. ஆபுத்திரன் அனை வருக்கும் திருக்கலத்தில் இருந்த உணவை அள்ளியள்ளி வழங்குகின்றான். எல்லோரும் வயிறு நிறைய உண்டு ஆமகனை வாயார வாழ்த்திச் செல்கின்ற னர். அம்பலத்தைச் சுற்றிலும் சிதறிக் கிடக்கும் சோற்றை நாய்களும் பிறவும் ஒன்றற்கொன்று பூசலிட்டுக் கொண்டு உண்டன. அவற்றிடையே காக்கைகளும், பிற புள்ளினங்களும் பறந்து பறந்துவந்து, சோற்றை அள்ளிக் கொண்டுபோய் மரங்களின் மீதும், மாளிகைகளின் மீதும் அமர்ந்து உண் ணத் தொடங்கின. ஒளி குறைந்த உடுக்களின் இடையே விளங்கும் முழு மதிபோல, பிச்சைக்காரர்களின் இடையே இருந்து அவர்களின் சோர்வை நீக்கும் ஆமகன், பசிக்கொடுமையால் விலங்குகளும் பறவைகளும் சிதறிய சோற்றிற்குப் போராடுவதைக் கண்டான். உடனே மனம் இரங்கி அம்பலத்தி னின்றும் வெளிவந்து வெள்ளிய சோற்றை அவைகட்கும் வழங்கினான். நாய்கள் வயிறு நிறையவுண்டு, வாலையசைத்துத் தம் நன்றியறிதலைத் தெரி




# ஔவையார்

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

"புகழ்ந்தாரைப் போற்றிவாழ்"

என்பது அடுத்துவரும் நீதி.

இதற்கு "உன்னைத் துதிசெய்து அடுத்தவரை கைவிடாமற் காத்து வாழ்வாயாக" என்பது பொருள். இது மிகுதியும் வறுமையின் விளைவேயாகும். தனக்குள்ள இன்றியமையாத முட்டுப்பாட்டினால் பிறிதொருவரை நாடிச் சென்று போற்றினால் மனமிரங்கி ஏதேனும் உதவி கிடைக்காதா என்கிற எண்ணத்தினாலேயே ஒருவரைப் புகழ்வது. இந்நிலை மிகவும் பரிதபிக்கத் தக்கதே. தனக்கு வரும் புகழ்ச்சி யுரைகளை விரும்பாதவர்கள் உலகிலேயே இரார். தோத்திரங்களாலேயே கடவுளர்களும் கருணைபுரிய முன் வருவதாக நூல்களில் காண்கிறோம். அப்படியால் கடவுளர்களும் புகழ்ச்சி விரும்பர்களா என்று வினவுதல் கூடும். அவ்வாறன்று. எத்தனை பாவங்கள் இழைத்தாலும் தன் பிழையுணர்ந்து இரங்கி மனமார வருந்தி சர்வவல்லமையுடைய

---

வித்தன. காக்கைகள் மகிழ்ச்சிப் பெருக்கோடு "கா கா" என்று கத்தின. வேறு புட்களும் பலவாறு ஒலித்தன. இங்ஙனம் மக்கள் ஒருபால் ஆபுத்திரனைச் சூழ்ந்து நிற்க, மற்றொருபால் விலங்குகளும் பறவைகளும் சூழ்ந்து நின்றன.

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால், செல்வம்
நயன் உடையான்கட் படின்"

என்ற பெருநாவலரின் மொழிக்குத் தகுந்த எடுத்துக் காட்டாக விளங்கினான் ஆமகன். காரணம் இன்றிக் கண்டவுடனே பகைக்கும் ஒரே இனமாகிய நாய்களும் நம்முட் பொறாமை யொழிந்து அவன் வழங்கும் உணவை அமைதியொடு உண்டு சென்றன. இயற்கையிலேயே தம் இனத்தைப் பொறுத்தவரையில் ஒற்றுமை யுடைய காக்கைகள் பிற புள்ளினங்களையும் உடன் சேர்த்து உணவு கொண்டன. பசிதீர்ந்த மக்கள் ஆபுத்திரனை வாழ்த்தும் பேரொலியும், மகிழ்ச்சிப் பெருக்கால் பறவைகள் ஒலிக்கும் ஆரவாரமும் மிகுந்தன. இவற்றை யெல்லாம் கண்ட ஆபுத்திரனுக்கு மகிழ்ச்சி மிக்கது; முகத்தில் புன்சிரிப்பு தவழ்ந்தது. "இதனினும் சிறந்த இன்பம் வேறு எங்கு உளது? 'துறக்கம்' என ஒன்று; கூறுகின்றனரே, அதில்தான் உண்டோ?" என மகிழ்ந்தான்.

இறைவனிடம் முறையிட்டுச் சரண்புகுந்தால் அவரை மன்னித்துக் காப்பது திருவருளின் பெருமை. இதைத் தெய்வகுணமாகக் கருதுவர் மேலோர். நமது மூதாட்டியாரே,

"சித்திரமுங் கைப்பழக்கம் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்"

என்றருளியதால் தயை என்பது முற்பிறப்பிற் செய்த அவரவர் நல்வினைக் கீடாக பிறவியிலேயே அரும்பி மலரும் உயரியகுணம் என்று கொள்ளப்படுகிறது. இவ்வரிய குணத்திற்குப் பெருஞ்சுட்டாக விளங்கினவர் இராமபிரான். அவர்பால் அமைந்த அப்பெரும் பண்புபற்றியே அவர் தம் நூலாகிய இராமாயணத்தைச் சரணாகதி சாஸ்திரமென்பர் வைணவப் பெரியார்கள். சேதுபந்தனம் செய்து சைனியங்களுடன் இலங்கைக்கு வந்து சேர்ந்த தசரத குமாரனிடம் சத்துருவின் சகோதரனான விபீஷணன் சரண்புகுகின்றான். சுக்கிரீவனும் மற்றுமுள்ள தலைவர்களும் அவ்விலங்கேசன் தம்பியை ஏற்று அபயந்தருவது தக்கதன்றெனப் பலபட எடுத்துக்கூறி ஒரு மனதாய் மறுக்கின்றார். அநுமான் ஒருவரே அபயம் அளிக்கலாம் என்று விநயமாக விண்ணப்பிக்கின்றார்; அனைத்தையும் கேட்ட வள்ளல் புன்னகை புரிந்து,

"இன்றுவந்தா னென்றுண்டோ எம்பியை யாயைமுன்னைக்
கொன்றுவந்தா னென்றுண்டோ புகலது கூறுகின்றான்
தொன்றுவந் தன்புமாறுத் துணைவனும் அவனேபின்னைப்
பின்றுமென்றாலும் நம்பாற் புகழன்றிப் பிறிதுண்டாமோ"

என்று தனது ஆழ்ந்த அருட்குணத்தை வெளியிட்டதாகக் கம்பநாடர் அழகாகச் சித்திரித்துள்ளார். பிறிதொரு சமையம் விபீடணற்கு இலங்கா பட்டாபிஷேகம் செய்து அப்பால் எதிரியாகிய இராவணனும் வந்து பிராட்டியை விடுத்து அபயம் புகுந்தால் யாது செய்வீர் என இலக்குவன் கேட்டதற்கு அவ்வாறு நிகழ்ந்தால் இராவணனுக்குத் தனக்குரிய அயோத்தியைக் கொடுப்பேன் என அஞ்சாது கூறியிருக்கின்றார் எனில் அவர் தம் கருணைப் பெருக்கையும் பிழைபொறுக்கும் தயையின் மேன்மையையும் எம்மொழிகள் கொண்டு போற்றுவது? அவ்வுயரிய பண்பு சாதாரணமாய் இருவினைக் கீடாகத் தேக மெடுக்கும் மனிதர்பால் அமைவதன்று. சத்துவகுண சம்பூரணமான தெய்வத்தன்மைக்கே ஏற்றதாகும். அதுபற்றியே நம்மைப் புகழ்ந்து அடுத்தவரையாவது நாம் கைவிடாமல் ஆதரித்தல் அவசியம் என்று வலியுறுத்துகின்றார். எதிரிகளையும் மன்னிப்ப தென்பதை மனதால் கற்பனை செய்வதும் முடியாததாதலினால் உன்னைப் புகழ்வாரையாவது ஆதரித்து வாழ்வாயாக என முதலில் அறிவூட்டுகின்றார். தன்னைப் புகழ்பவர்களிடம் யாருமே அன்பு கொள்ளுவ தியல்பாயிருக்க, அதனை ஒரு பெரிய குணமாக இப் பெரியார் கூறுவானேன் என்று வினவுவாரும் இருக்கலாம். உண்மை அதுதான்; புகழை விரும்பாதவர் எவருமில்லை. ஆனால் உலோகம் என்னும் இரக்கமற்ற அரக்கன் இடைமறித்துப் புகழ்ச்சி விருப்பம் என்னும் குணத்தையும் கொலைபுரிகின்றான். வருபவன் நம்மைத் தனது காரிய சாதகத்திற்காகப்

புகழ்வான். அவனுக் கேதேனும் அளிக்க நேர்ந்து விடும். ஆகையால் சிக்கெனத் தாளிட்டுக்கொண்டு தலை மறைவாகப் பதுங்குவோ மென்பவர்களும் பலர் இருக்கின்றனராதலின் அவ்வாறு உலோபத்திற் கடிமையாகித் தன்னைத் துதிசெய்து அடுப்பவரைக் கைவிட எண்ணுதே என்பது தோன்றவே, புகழ்ந்தாரைப் போற்றிவாழ் என்றருளினர் பெருமாட்டியார். அடுத்தவரை அன்புடன் ஆதரியாத நிலை தாழ்வேயன்றி வாழ்வாகாது. ஆதரிப்பதே வாழ்வாகும் என்பது தோன்ற "வாழ்" என்று வாயார வாழ்த்தினர். புகழ்வாரையும் புறக்கணிக்கும் உலோபிகளைப்பற்றி நம் பண்டைப்புலவர்களிற் சிலர் தங்கள் அநுபவங்களைச் செய்யுள்களாக இயற்றி வைத்தவைகள் பல. அதனுலாவது உலோபம் அவர்களை விட்டகலாதா ? என்று கருதியும் இயற்றி யிருக்கலாம். உதாரணமாக,

"கல்லாத வொருவனை யான்கற்று யென்றேன்
காடெறியு மவனைநா டாள்வா யென்றேன்
பொல்லாத வொருவனை நான்நல்லா யென்றேன்
போர்முகத்தை யறியானைப் புலியே றென்றேன்
மல்லாரும் புயமென்றேன் சூம்பற் றோளை
வழங்கறியான் தன்னைநான் வள்ளால் என்றேன்
இல்லாது சொன்னே னுக்கில்லை யென்றான்
யானு மென்றன் குற்றத்தா லேகின்றேனே."

என்றும்,

"எழுதப் படிக்க வகையறியாத மூடனை
இணையிலாக் கவிஞ னென்றும்
ஈவதறியாத கனலோபியைச் சபைதனில்
இணையற்ற கர்ணன் என்றும்
அழகற்ற வொருகோர ரூபத்தை யுடையோனை
அதிவடிவ மார னென்றும்
ஆயுத மெடுக்கவும் தெரியாத பேடிகளை
ஆண்மைமிகு விஜய னென்றும்
முழுவதும் பொய் சொல்லி யலைகின்ற
வஞ்சகனை மொழியரிச்சந்திர னென்றும்
முறைநியதி யறியாது துதிசெய்த
பாவத்தில் மூண்டவினை சிறிதாகுமோ !........."

என்றும் வரும் செய்யுள்களே போதிய உதாரணங்க ளாகும்.

இத்தகைய இகழ்ச்சிகளுக்கு உதாரண புருடர்களாக வாழ்வதும் ஒரு வாழ்வாகுமா ? இதுபற்றியே மூதாட்டியார் புகழ்ந்தாரைப் போற்றும்படி அருளிச்செய்கின்றார். மூதாட்டியார் கால் நடையாகவே தமிழ்நாட்டில் உள்ள

சிற்றூர்களையும், ஆங்காங்குள்ள மக்கள் இயல்புகளையும் ஆண்பாற் புலவர்களால் செல்ல முடியாத அடுக்களை யுள்ளும் புகுந்து ஆண்டுள்ள நற்பெண்டிர் தீப்பெண்டிர்களையும் அளவளாவி அவர் தம் இருவகைக் குணங்களையும் நன்குணர்ந்தவ ராகலின் இவ்வண்ணம் அடுத்தவர்களைக் கைவிடாது போற்றி ஆதரிக்கும்படி தாமியற்றிய நீதிக்கோவையில் கூறிவைத்தார் என்பது வெள்ளிடைமலை. புகழ்ந்து அடுத்தவர்களை ஆதரியாத இழிகுணம் பெண்பாலார்களிடையேதான் மிகுதியென்று சிலர் கூறுவதுண்டு. ஆண்மகனின் உலோபத் தன்மைக்குப் பயந்து தோட்டத்தின் வழியாக அடுத்தவர்க் கிரங்கி உதவி புரியும் பெண்தெய்வங்களும் பலர் இந்நாட்டில் உண்டு. கன்மனப் பெண்டிருக்கஞ்சிக் காணமற் கொடுத்துதவும் தயாளகுண சீலர்களும் பற்பலர் உளர். இரு பாலார்களிலும் இக்குறையுடையோர் இருத்தலினால் ஔவையார் இரு பாலாரையும் நோக்கியே இதனைக் கூறி யருளினர் போலும். இதற்கு ஔவையார் ஒரு வீட்டிற்குச் சென்று இல்லத்தலைவனால் அன்புடன் வரவேற்கப்பட்டும் அவர் மனையாளின் பேய்க்குணத்தினால் அவர் பட்டபாட்டை வருணித்து,

> "இருந்தங் கிதம்பேசி ஈருருவி மெல்ல
> விருந்தென்று கணவன் விளம்பத்—திருந்திழையாள்
> பாடினாள் பேய்ப்பாட்டைப் பாரிய சுளகெடுத்துச்
> சாடினாள் ஓடோடத் தான்."

என்ற வெண்பாவைப் பாடியதாகவும் வழங்கி வருகின்ற தாதலினாலும் முதற்கடமை மாதருடையதே. கம்பரும் "மாதரார் அற்பி னின்றன அறங்கள்" என்றருளினர். புகழ்ந்தாரைப் போற்றி வாழ்வதற்கு இல்லத்தலைவன் முயன்றாலும் அவன் வாழ்க்கைத் துணைவி மனப்பூர்வமாக அவனுடன் உடன்பட்டால்தான் அக்கடமை நன்கு நிறைவேறும். புகழ்ந்து அடுப்பவரைக் கைப்பொருளுக்குக் கேடு என்று கருதி போ போவெனக் கடுமொழி கூறிக் கொடு முகம் காட்டாமல் ஆறுதலளிக்கும் நன்மனமோடும் பெண்கள் இருக்கவேண்டிய தவசியம். இந்நீதியை இருபாலாரும் கைக்கொள்ளல் வேண்டுமென்பதே மூதாட்டியார் விருப்பம். இந் நீதியை மற்றொரு வகையிலும் பொருள் கொள்ளுதல் கூடும். அதாவது புகழ்ந்தார் என்பது மேலே கூறியபடி தம்மைத் துதிசெய்து அடுத்தவர் என்று கொள்ளுவதன்றி, உலகம் ஒருதலையாகப் புகழ்ந்தவர்களை நீயும் போற்றி வாழ்வாயாகவென்று உணர்த்தியதாகவும் கொள்ளலாம் என்பது மற்றொருவகை. இராமனையும் குறைகூறும் மனோபாவம் உடையவர் சிலர் தோன்றலாம். அத்தகைய கீழ்மையான எண்ணங்களுக் கிரையாகாமல் வாலிபர் அறிவுத்திறம் பெறவேண்டுவது அவசியம். சிறியவர் இகழ்ந்து ஞானி செய்த பாவத்தைக் கொள்வார் என்ற பழமொழியும் நம் நாட்டில் நிலவி வருவது இதற்கேற்ற உதாரணம். கலப்பற்ற பொய் பேசும் விரதிகளும் தருமன் ஒரு பொய் பேசியதைக் கண்டித்துக் கட்டுரையெழுத முன்வருவ தியல்பு: ஆதலின் இக் குழுவினருக்கும் இந்நீதி அவசியமாகக் கருதுவதில் தவறில்லை. "உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்து, அலகையா வைக்கப் படும்" என்றார் வள்ளுவரும். எனவே உலகம் புகழத்தக்க உத்தமர்களை எதிர்த்தும் தாக்கியும் பேசும் மனோநிலையையும் இந்நீதி மறுப்பதாகக் கொள்ளல் அழகுடைத்தாகும்.

இனி,

"பூமி திருத்தியுண்"

என்னும் நீதியாகும். இதற்கு நீ உன் விளைநிலத்தைத் திருத்தி உண்பாயாக என்பது பொருள். நிலத்தைச் சீர்திருத்துவது இன்றியமையாத தென்பது பெறப்படுகின்றது. தனக்குரித்தாகிய விளைநிலத்தை நன்றாகப் பண்படுத்துவதற்குச் சோம்பலுற்று நல்ல பலனை யடையாமல் வறுமை வாய்ப்படுவோர் பலரையும் காண்கிறோம். இது மிக வருந்தத்தக்க விஷயம். நிலத்தைத் தரப்படுத்தி விளைவிக்கும் தொழில் ஒன்றே தொழில்களுக்குள் சிறந்ததாகும். இதுபற்றியே "உழுதுண்டு வாழ்தற் கொப்பில்லை கண்டீர், பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்றருளினர் நாயனர். "சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்" எனவும், "பலகுடை நீழலுந் தன்குடைக்கீழ்க் காண்பர், அலகுடை நீழ லவர்" எனவும் வரும் குறள்களை ஊன்றி நோக்குவோமெனில் எல்லாத் தொழில்களும் உழவுத் தொழிலிற்குப் பிற்பட்டதே யென்பதும், மன்னர் பெருங்குடை வாழ்வும் விவசாயிகளின் உழைப்பின் கீழ் நிற்பவைகளே யென்பதும் விளங்க உணரலாம். பிறரிடம் குறையிரந்து யாதொரு பொருளையும் பெற வேண்டாதவர் விவசாயிகளே யாவர். உலகில் ஏனைய தொழில்கள் யாவும் பிறிதொருவரை நாடாமல் முடிக்கக்கூடிய தன்று. அத்துணை சுயேச்சை வாய்ந்த விவசாயத்தை அசட்டை செய்து வயிறு வளர்க்க ஊழியத் தொழிலை விரும்பி நகரங்கட்குச் செல்லுவோர் எத்துணை எத்துணை பேர்? நிலங்களை உடையவர்கள் பயிரிடாமலே வாரத்திற்கும் குத்தகைக்கும் ஒப்படைத்துவிட்டு சர்க்கார் ஊழியத்தைக் கண்ணியமெனக் கருதி நகரம் செல்கின்றனர். நிலம் படைத்தவன் நேர்முகமாகப் பயிரிடாமலும், விளைநிலங்களைக் கண்ணெடுத்துப் பாராமலும் இருந்தால் அதனாலேயே நிலத்தின் தரம் வெகுவாகக் குறைந்து விடுவது தெளிவான உண்மை. மனையாளைக் கண்ணெடுத்துப் பாராமல் ஒரு நாயகன் பராமுகமா யிருந்து பிறர் மூலமாக அவள் தேவைகளை அளித்து வந்தாலும் எப்படி அம்மனைவி அன்பற்று மனந்திரிந்து விடுவளோ அதுபோலவே பூமியும் உரியவனுடைய நேர்முகமான உழைப்பைப் பெறுவிடில் நல்ல பலனைத் தராமல் ஒழியுமென்பது தேவர் திருவாக்கு. காளத்தி புராணத்தில்

"ஓவா வறுமை யுழந்தாலு மற்றொருவர்
ஏவா துயிர்வாழ்ந் திருப்பதே நன்றாகும்
தாவாத செல்வம் தருமெனினும் குற்றேவல்
ஆவா கொடிது கொடிதென் பாருமாயினர்."

என்று சேவகா விர்த்தியை இழித்துக் கூறினர். உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை யென்பதை ஒரு மனதாக வற்புறுத்தாதவர்கள் உலகில் ஒருவருமில்லை. கண்மூடித்தனமாக எத்தொழிலைச் செய்வதும் நலமன்று. எத்தொழில்களுக்கும் தலைமைத் தொழிலாகிய விவசாயத்திற்கும் அக்கலையில் ஆராய்ச்சியாளர்களால் காலவேற்றுமைக்குத் தக்கபடி கண்டுபிடிக்கப்படும் முன்னேற்றத்திற்கான முறைகளையும் அறிந்து அவ்வழியில் முயன்று பண்படுத்தல் வேண்டும். என்னென்ன முறைகள் காணப்படினும் அனைத்திற்கும் அடிப்படை தொடிப்புழுதி கஃசாகும்படி (அதாவது ஒருபலம் எடையுள்ள புழுதி

காற்பலம் ஆகும்படி) அவ்வளவு நன்ருகப் பன்முறை உழுது வெயிலில் உலரும்படி செய்தல் ஒன்றேயாம். அவ்வாறு செய்வதால் களைகளும் வேரற்று, கிருமிகளின் கருக்களும் சிதைந்துவிடும் அத்தகைய நிலத்திற்கு எருவிட வேண்டுவதும் அவசியம் அன்றென்பது அறிஞர் துணிபு. உழும் தொழிலைக் கேவலமாகக் கருதும் ஒரு மனப்பான்மை நாட்டில் வேரூன்றிய பொழுதே பசிப்பிணியும் வறுமையும் படிப்படியாக வளர்ந்து வந்துவிட்டனவென்பதைக் கூருமலே தெரிந்து கொள்ளலாம்.

"மிடியனொரு செய்யான் எனச்செய் விளைவைக் காக்குமது போலப்
படியில் கல்வி விரும்பினேன் பாடம் போற்றும் அதுபோல."

என்று பிரபுலீலையில் ஆசிரியர் கூறியுள்ளார். ஒருவன் தனக்குரிய சிறிய வயலிலேயே கண்ணுங்கருத்துமா யிருந்து பயிரைக் காப்பதற்குப் படிப்பில் கல்வி விரும்பினேன் பாடம் போற்றுவதை ஒப்பிடுகின்ருர். நேர்முகமாகச் சென்று பார்க்க இயலாத பெரும்பூமிகளையுடைய செல்வந்தனைவிட ஒற்றையாளாக விருந்து சிறிய பூமியை அகலாதிருந்து காவல் செய்து பயிரிடும் ஒரு ஏழையின் ஊக்கத்தையே சிறப்பித்துள்ளார் என்பது ஈண்டு கவனிக்கத் தக்கது. ஏழை விவசாயிக்குள்ள ஊக்கமும், உழைப்பும், சகிப்பும் பணக்கார விவசாயிகளிடம் துருவிப் பார்த்தாலும் காண முடியாது. செல்வம் பெருகப் பெருகச் சோம்பலும் டம்பமும் தீயொழுக்கங்களில் ஈடுபாடும் வளரத் தலைப்படுவதியல்பு. விளைநிலங்களுக் கருகில் சிறுபரண் கட்டி அதிலேறிப் படுத்துறங்கும் ஏழை விவசாயியைப்போலத் தனவந்தன் பல ஆயிரக்கணக்கில் கட்டிய மாளிகையில் பஞ்சணையில் கவலையற்றுப் பயமற்றுத் தூங்க முடியாது. பணக்கார விவசாயி பயத்தோடு பிணிக்கப்பட்டவனே. ஏழை விவசாயிக்கு அச்சம் என்பதே தெரியாது. பணமுடையோன் செயற்கையோ டுறவுகொண்டு வெம்மையில் மூழ்குவான். ஏழையோ இயற்கையோ டியைந்து இன்பத்தைச் சுவைப்பான். அதுபற்றி பூமாதேவியும் தன்னை வளப்படுத்தி தனது செம்மையில் மனமகிழ்ந்து தா னளிக்கும் பைங்கூழை ஆநந்தமாக உண்டு தன் மடியிலேயே கண்ணுறங்கும் உழைப்பாளியை செல்வச்சேற்றில் விழுந்து தன்னை மறக்கும்படி விடுவதில்லை. உழுதவன் கணக்கிட்டால் உழக்கும் மீதிப்படா தென்பது உலக வழக்கு. அவ்வாறிருப்பதே இவன் ஊக்கத்தைக் காக்கும் வழி. இதற்கு மாருக அதிக லாபம் ஒரு தடவை விவசாயி பெறுவானுகில் பல வருஷம் அதற்கீடாக கஷ்டமே யடைவான். இது கண்கூடு. அடுத்தடுத்து லாபம் ஒரு விவசாயிக்குக் கிட்டுமாகில் அவன் விரைவில் சரீர உழைப்பைக் கைவிட்டு சுகபோகங்களை நுகர்தற்கு முற்படுவதும் இயற்கை. எனவே எல்லாத் தொழில்களுக்கும் தாய்த்தொழிலாகிய விவசாயமே சிறந்த தென்பதும் அவ்விவசாயமும் சோம்பலற்று பெரும்லாபங்களை எதிர்பாராமல் நன்ருக உழைப்பதனுலேயே பலன் தர வல்லதென்பதும், அதன் ஊதியத்தை உண்பதே தேவ ரமுதத்தினும் சிறந்த உணவென்பதும் ஊழிய வர்க்கத்திற் சேர்ந்து அவ்வருவாயினுல் உண்பது சிறப்பன் றென்பதும் மூதாட்டியார் குறிக்கோளாகும்.

---




## 45. தீபகல்ப யுத்தமும் நெப்போலியன் வீழ்ச்சியும்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

கடந்த சில மாதங்களாக ஐரோப்பாவின் தென்மேற்கில் தொங்கும் நிலபாகத்து தேசமான ஸ்பெயினில் பிரமாதமான புரட்சியும் யுத்தங்களும் வெடிகுண்டு வீச்சுகளும், பீரங்கி பிரயோகங்களும், காலி செய்வதும், பிடித்துக் கொள்வதும், சிறை பிடிப்பதும், கொலை செய்வதுமான கணக்கற்ற நிகழ்ச்சிகளும், குழப்பங்களும் ஏற்பட்டிருப்பதை, பத்திரிகைகள் மலிந்து கிடக்கும் இந்நாளைய ஜனங்கள் நன்றாக அறிவார்கள். இந்த ஸ்பெயினும், அடுத்த போர்ச்சுகலும் சேர்ந்த நிலபாகத்தை பூகோள ஆசிரியர்கள், "ஐபீரியன் தீபகல்பம்" (The Iberian peninsula) எனவழைப்பர். நெப்போலியனுடைய உன்னத நிலைக்குப் பங்கம் விளைவித்து வீழ்ச்சியை ஏற்படுத்திய அந்த யுத்தம் இந்த ஐபீரியன் தீபகல்பத்தில் ஆஸ்பதமாகி முடிந்ததினால் அந்த யுத்தத்திற்கு சரித்திரங்களில் சுருக்கமாக (The peninsular war) "தீபகல்ப யுத்தம்" என்ற பெயர் ஏற்பட்டது.

நெப்போலியனுடைய "கண்டத்து முறை" மிகக் கடுமையானது. குடி ஜனங்கள் கணக்கில்லாத கஷ்டங்களை யடைந்தனர். கொற்றவனோ குடிகளின் கஷ்டங்களைக் குறிக்கொள்ளவே யில்லை. ஆக, விதியின்றி அடங்கின தேசங்களும், இதர தேசங்களும், மீறி நடக்கலாயின. போர்த்துகல் தேசம் முதலாவதாக ஆரம்பித்தது. இதர தேசங்களும் பின்பற்றத் தொடங்கின. "வாய் புதைத்துக் கைகட்டி வஞ்சமுடனா ளரசை, நோய் பலவே வாட்டும் நுழைந்து" என்ற அறநூல் வாக்கு உண்மையாகு மல்லவா? தவிரவும், ஸ்பெயின் தேசத்தில், தகப்பனுக்கும் தனயனுக்கும் உண்டான தகராறைத் தீர்க்கும் முறையில் நெப்போலியன் நியாயமற்ற முறையில் இருவரையும் நீக்கித் தன் தம்பி ஜோஸப்பை அரசனாக்கியபோது, குடிஜனங்கள் சுபாவமாகவே கடுங்கோபங் கொண்டு கிளம்பினர். அதே அறநூலில் உள்ள அபூர்வமான மற்றொரு புனிதவாக்கு "குடிகளோ டொவ்வாத கொற்றவன் தன்னாட்டில், முடியாதே யோங்கும் முரண்" என்பதாகும். முடிவுப்பலன் மும்முரமான யுத்தம். இந்த யுத்தம், நெப்போலியனுடைய வீழ்ச்சிக்குக் காரணமாகி சரித்திரக்காரர்கள், "இத் தீபகல்ப யுத்தம், நெப்போலியனுடைய உடம்புப் பக்கத்தி லேற்பட்ட தீராத ஒரு அழுகு ரணம் போன்றுவிட்டது" (The peninsular war proved to be a cankering ulcer on the side of Napoleon) என்று குறித்திருக்கின்றனர். "வல்லான் வகுத்ததே வாய்க்

கால்" என்ற ரீதியே உலகத்தின் போக்காக இருந்தாலும், வல்லவனுக் கெல்லாம் வல்லவனான சர்வேஸ்வரன் ஒருவன் உண்டு. அவனுடைய வகுத்தல் வேறொன்றுண்டு என்ற அருமையான பாடத்தை, தற்காலத்தில் வெறி கொண்டலையும் மானிட வர்க்கத்தின் ஒரு பகுதி உணருவதில்லை. "முடி சார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு பிடி சாம்பலாக வெந்து மண்ணாவதுங் காணும்படி"யான பல சந்தர்ப்பங்கள் சரித்திரங்களில் பொலிந்து கிடக்கின்றன. (அவ்வாறு இருந்தும் பொருள் சேர்க்கைப் போக்கிலும், கண்டதே காக்ஷி கொண்டதே கோலம் என்ற ரீதியோடும், மேற்கு நாட்டு ஜனங்கள் நடந்துவருவது ஆழ்ந்து கவனிப்பவர்களுக்குத் தோன்றும். இம்மாதிரி ஞானத்தை உலகத்திற்கே போதித்து வந்திருக்கும் பெருமையையுடைய நம் உன்னத பாரதநாடு மேற்குநாட்டுப் போக்கே விசேஷமென மோஹித்துச் செய்துவரும் போக்கு இன்னும் பரதவிக்கத்தக்க விஷயமாகும். அந்தப் போக்கின் கெடுதல்களை எடுத்துச்சொல்லிய பெரியோர்களும் உண்டு. இருந்தும் வருகிறார்கள். ஆனால் அவர்கள் பைத்தியக்காரர்களாக கருதப்படுவதும் கண்ட்ராவியான ஒரு பாவமேயன்றோ?)

ஒரு பெரிய பதவியிலுள்ளவர்களுடைய வாக்கிற்கும் போக்கிற்கும் எதிர்ப்பு ஏற்படும்போது ரௌத்திராகாரமான கோபம் வருவது இயற்கையேயன்றோ! தன்னை எதிர்த்த ஸ்பெயினை எவ்விதத்திலும் நசுக்கிச் சாறு பிழிந்துவிட வேண்டுமென நினைத்து விட்டான் நெப்போலியன்! பெரிய முஸ்தீப்புகளையும் ஏராளமான படைகளையும் அனுப்பினான். ஏற்பாடான ஒரு ஸ்தாபன அரசாங்கத்தை எதிர்ப்பது ஆரம்பத்தில் அசாத்தியமானதுதான். அல்லல்களும் நிறைந்ததுதான். அதையொட்டி ஸ்பெயினும் போர்ச்சுகலும் சிரமப்படவே செய்தன. எங்கேயென்று காத்திருந்த இங்கிலாந்து இதுதான் தருணமென்று ஆட்களையும் கப்பலையும் அனுப்பியது. ஆரம்பத்தில் அனுப்பப்பட்ட தளகர்த்தர்களும் நிலச் சண்டையில் நெப்போலியனை எதிர்ப்பதானால், முடியாத காரியமென்றே மயங்கிக் கொண்டுதான் முயற்சி செய்தனர். கொரன்னா (Corunna) என்ற இடத்தில் நடந்த சண்டையில் வெற்றி ஆங்கிலேயருக்கே என்றாலும் யுத்த முடிவில் தளகர்த்தர் ஸர் ஜான் மூர் என்பவர் மரணமடைந்து விட்டதால் வெற்றியைக் கருதியபடி பிரயோஜன முள்ளதாகச் செய்து கொள்ளாதபடி கப்பலேறி விட்டனர். அதுவும் இறந்த தளகர்த்தருக்கு "ஈமச்சடங்குகளைக் கூட சரிவர நடத்தாமல் அவசரக்கோலமாய் அள்ளித் தெளித்துவிட்டு இரவுக்கிரவே ஓடிவிட்டார்கள்" என்று ஆங்கிலக் கவியொருவர் பிரலாபிப்பதை "The burial of Sir John Moore at Corunna" என்ற ஆங்கிலச் செய்யுளில் இன்றும் காணலாம்.

இந்தியாவில் அதே சமயம் வீரமராட்டரைச் சிதைத்துத் தோற்கடித்து விட்டதாக பெருமை கொண்ட ஸர் ஆர்தர் வெல்லெஸ்லி (Sir Arthur Wellesley) என்ற தளகர்த்தர் ஆங்கிலப் படைகளுக்குத் தளபதியானார். அவர் தலைமை வகித்ததிலிருந்து யுத்தப்போக்கு ஒருவிதம் மாறி நெப்போலியன் கை சளைக்கலாயிற்று. இந்த தொடர்ச்சிகளில் பொதுவாகவே யுத்தங்களைப்பற்றிய விவரங்கள் சண்டைகளை விவரித்தல் என்ற ரீதியின்றி பொதுப் போக்கை மட்டும் விளக்கி வந்திருப்பது நேயர்கள் அறிந்ததே.

ஆகவே இந்த யுத்தத்தில் நடந்த சண்டைகளின் பெயர்கள் பின்வருவன என்று மட்டும் சொல்லிவிடுவோம். முக்கியமாக சண்டை நடந்த இடங்கள் கொரண்ணு, விமிரோ, டலவீரா, படஜாஸ், விட்டோரியா என்பனவாம். கடைசியாகச் சொல்லப்பட்ட விட்டோரியாவில்தான் பிரஞ்சுக்காரர்கள் முடிவாகத் தோற்கடிக்கப்பட்டு ஜோஸப் ஸ்பெயினைவிட்டு தூரத்தியடிக்கப் பட்டார். பிரான்ஸ் தேசத்திற்குள்ளேயே விரோதிகளின் சேனைகள் நுழைந்து டூலூஸ் (Toulouse) என்ற விடத்திலும் எதிரிகள் வெற்றி பெற்றனர் என்று சரித்திரங்கள் கூறும். இந்த வெற்றிகளின் காரணமாக வெல்லெஸ்லி வெல்லிங்டன் பிரபுவாக்கப்பட்டார் என்பதும் சரித்திரம். இப்படிச் சிறந்த முஸ்தீபிலும் நெப்போலியனுடைய தோல்விக்குக் காரணமாக இருந்தது, எதிர் பாராதவழியில் உண்டான ருஷ்யப் படையெடுப்பாகும்.

நெப்போலியன் மும்முரமாக ஸ்பெயினில் முஸ்தீபுகள் செய்து கொண்டிருந்த அதே சமயத்தில் ருஷிய அரசன் நெப்போலிய ஞநிக்கத்தை நிரா கரித்து, எதிரிடையாகக் கிளம்பி போர் முழக்கம் செய்தான். இதுவரையில் இவ்வளவு துணிகரமாக நெப்போலியனைப் பகிரங்கமாய் அறை கூவி யழைத்த தில்லை. ஏனெனில் நிச்சயமாக நெப்போலியன் தம்மை எதிர்க்க முடியாதென்று துணிந்துவிட்டார். அவருடைய அகங்காரத்தை யடக்க என்று அதிகப் பலமானதொரு சேனையை அங்கேயனுப்ப எண்ணித் தாமே நேரில் அப்படைக்குத் தலைமையையும் வகித்தார். நேரே அம்புபோல் பாய்ந்து சென்றார். புயல் காற்றை எதிர்ப்பாருமுண்டோ! "கல்லுளிச் சித்தன் போனவழி காடுமே டெல்லாம் தவிடுபொடி" என்றபடியும், "தன்முன் னேர்ந்த தனைத்தும் துடைத்து முடிப்பான்" என்றபடியும், காட்டுத்தீ அல்லது வெள்ளம்போலும் தம் வழியில் நேர்ந்த ருஷியப் பிரதேசங்களை யெல்லாம் சுட்டுப் பொசுக்கி சாம்பலாக்கி நாசஞ் செய்துகொண்டே தலைநகரமாக இருந்த மாஸ்கோவை யடைந்தார்! இவ்விவரம் தெரிந்த மாஸ்கோ வாசிகள் முன்னெச்சரிக்கையாக, நகரத்தில் ஒரு தூசிகூட இல்லாமல் காலிசெய்து விட்டனர். நகரத்தையும் விட்டு வெளியேறிவிட்டனர். வெற்றி நிச்சயமாக நெப்போலியனுக்குத்தான்! சந்தேகமே இல்லை. ஆனால் காலம் குளிர்காலம். நோக்கிய இடமெல்லாம் உறைபனி நிறைந்து கிடந்தது. அவயவங்கள் பூராவும் விறைத்து மரத்து உணர்ச்சியற்றிருந்ததை வீரர்களும் வீரர்கள் தலைவனும் அனுபவித்தனர். நெடுந்தூரம் வந்த களைப்பு ஒருபுறம். பழியான பசி மறுபுறம். பாழ்த்துக் கிடந்தகாக்ஷி யொருபுறமாக பசித்தவர்களுக்கு உணவு இல்லை யென்பதைக் காட்டி உறுமியது. "தன்வினை தன்னைச் சுடும். வினை விதைத்தவன் வினையை யறுப்பான்" என்பது முதுமொழி. யாரை நோவது? எவரை யுறுமுவது? குளிரினாலும், பசியினாலும், நோயினாலும் மயங்கி விழுந்து மடிந்தனர் வெற்றி வீரர்கள். என்னே காளித் திருநடனமும், ஊழிக்கூத்து விளக்கமும்! எஞ்சியவர் மீண்டு திரும்பினால் வந்த வழியிலும் வழியொன்று மில்லாமல் வதையுண்டனர். "கலியுகத்தில் கைமேல் பலன்!" உண்மையாகும்! இப்படியிருந்த சேனையை எதிரிகளும் பல ஆத்திரங்களையும் கொண்டு வெருட்டித் தாக்கினர். "தன்னிலைமை விட்டுப் பெயர்ந்த யானையும் தன் பலங்குன்றும். "தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்தம், நிலையி னிழிந்தக் கடை" என்பன வேதவாக்குகள். பொய்யா மொழிகளும் ஆவன! லீப்ஸிக் என்ற இடத்தில் ஜெர்மனியரும் பிரஷ்ஷியர்களும் ஆஸ்திரியர்

களும் சேர்ந்து, நெப்போலியனைத் தாக்கி முதல் முதலாக தரைச்சண்டையில் நையத் தோற்கடித்தார்கள். இந்த ஒரு சமயத்தில்தான், பிரஞ்சுக்காரர்கள் தங்கள் நாட்டிற்குள்ளேயே டூரஸ் என்ற விடத்தில் தோல்வி யுற்றதும் ஏற்பட்டது. கலங்காத நெப்போலியனும் திணறினன். பிரான்ஸில் குழப்பமும் மிகுந்துவிட்டது. எதிரிகள் தளர்ந்துவந்த நெப்போலியனைக் கைதியாக்கி மத்திய தரைக்கடலிலுள்ள எல்பா (Elba) என்ற தீவில் சிறை வைத்தார்கள் 1814-ம் வருஷத்தில்! ஐரோப்பா முழுவதும் ஒருவாறு சற்று சுவாசம் வாங்கி, பெருமூச்சுவிட நேரம் ஏற்பட்டதெனச் சொல்லலாம். பெரிய மேதாவிகளையும் கலக்கிய நெப்போலியன் சிறையில்பட்டான் என்ற சந்தோஷம் ஐரோப்பிய நிபுணர்களின் மனதில் கூத்தாடத் தொடங்கியது. அனைவரும் ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னு பட்டணத்தில் கூடிக் கும்மாளம் போட்டுக்கொண்டு, நெப்போலியனுடைய பரந்த சாம்ராஜ்யத்தை யெப்படி யெப்படிப் பங்கு போடுவதென திட்டங்கள் வகுத்துக்கொண்டிருந்தனர்.

வெற்றிப் பலன்களை வகுத்துக் கொண்டிருந்த வல்லரசுப் பிரதிநிதிகள் வியன்னுவில் வேலை செய்து கொண்டிருக்கையில் வந்தது வெடிகுண்டு வீச்சுப் போன்றதான வதந்தி—வதந்தியல்ல; உண்மையான சமாச்சாரமே யாகும். நெப்போலியன் எல்பாவிலிருந்து தப்பிக் கொண்டு, தெரியாமல் பிரான்ஸுக்குள் நுழைந்து விட்டான். பழைய வீரர்கள் புதிய ஆர்வத்துடன் கூடினர் அவன் கொடியின் கீழ்! மறுபடியும் நெப்போலியன் நிமிர்ந்து விட்டான். பகற்கனவு கண்டு கொண்டிருந்த பிரதிநிதிகள் வியன்னுவை விட்டுப் பறந்தனர் திசைக் கொருவராய்! "மூன்றே முக்கால் நாழி முத்துமழை பொழிவது போல்" என்றபடி சிம்மாதனத்தில் உட்கார்ந்த பதினெட்டாவது லூயி என்ற அரசன் போன திசை தெரியவில்லை. நெப்போலியன் மீண்டும் சக்ரவர்த்தியாகி விட்டான். வழக்கம் போல் பிரான்ஸுக் கெதிரியாக இங்கிலாந்தும் ஜெர்மனியும் ஒன்று சேர்ந்து, வெல்லிங்டன் பிரபு இங்கிலீஷ் சேனையையும் மார்ஷல் ப்ளூச்சர் என்பவர் ஜெர்மனிப் படையையும் நடத்திக் கொண்டு பெல்ஜியம் தேசத்தின் வழியாய் பிரான்ஸை நோக்கி கடுகி வந்தார்கள். நெப்போலியன் அவர்களிருவரையும் ஒன்று சேரவொட்டாமல் தனித் தனியே தூளாக்கிவிட முயற்சி செய்தான். அது முற்றிலும் கைகூடாமல் வாடர்லூ என்ற இடத்திய சண்டையில் வெகு சிரமப்பட்டு முடிவில் ஆங்கிலக்கட்சி ஜெயமடைந்தது. ஆரம்பத்தில் வெற்றியே கிடைக்காதென தோன்றியதாம். ஜெர்மன்படை நெருங்காமல் செய்யப்பட்ட முயற்சி பூரண வெற்றி யேற்படாமல் நெப்போலியன் நினைத்தது கைகூடாமல் போனது துரதிர்ஷ்ட வசமேயாகும். நெப்போலியன் தப்பியோட முயன்று பலியாமல் தானே அகப்பட்டுக் கொண்டதின்பேரில் அவனைப்பிடித்து கப்பலில் ஏற்றி ஆப்பிரிகாவின் மேற்குக் கரையிலுள்ள ஸெயிண்ட் ஹெலினு (St. Helena) தீவில் தனிமையாக சிறை வைக்கப்பட்டு ஆறுவருஷங்கழித்து இறந்த பிறகு அவனுடைய அஸ்திகள் ஆடம்பரத்தோடு பிரான்ஸுக்குக் கொண்டு வரப்பட்டு தக்க சடங்குகளுடன் பாரிஸில் புதைக்கப்பட்டனவாம்.

மறுபடியும் நிம்மதியாக வல்லரசுப் பிரதிநிதிகள் அதே வியன்னுவில் 1816-ல் கூடி தங்கள் இஷ்டப்படி பிரிவினைகள் செய்து பழைய அரச வம்சத்திய பதினெட்டாவது லூயியை மீண்டும் முடிசூட்டி பிரான்ஸின் எல்

# "உயர்வும் தாழ்வும்"

—:(o):—

(ஆர். கிருஷ்ணமூர்த்தி ராவ்.)

இம் மலர்தலை யுலகின்கண், ஓரறிவு படைத்த மரம் முதலாக ஆறறிவுபடைத்த மக்கள் ஈறாக வதிந்துவருவது கண்கூடு. இவை யாவற்றிலும், மனிதனே உயர்ந்தவனென்று கருதப்படுகிறான். ஏனெனில் ஏனைய உயிர்களைவிட அவனுக்கு ஆறாவது அறிவாகிய பகுத்தறிவு மிளிர்ந்திருக்கிறது. "அரிது, அரிது, மானிடராய்ப் பிறத்த லரிது" என்று முன்னோர்கள் பொன்னேபோல் மொழிந்துள்ளார்கள். அங்ஙனம் அடைவதற்கரிய மானிடப் பிறவியி னுள்ளும் சிலர் உயர்ந்தோ ரென்றும் சிலர் தாழ்ந்தோ ரென்றும் கருதப்படுகின்றனர்.

பொதுவாகச் செல்வந்தர்களை உயர்ந்தவரென்றும், வறியவரைத் தாழ்ந்தவரென்றும் இவ்வுலகம் கருதுகிறது. நாம், அதனை ஆராய்ந்து நோக்குமிடத்து, செல்வந்தனை எக்காரணம் பற்றியும் உயர்ந்தோனென்று கூறுவதற்கு இடையிலது. செல்வம் ஒன்றினால் அன்றோ உயர்ந்தவ னாகின்றான். செல்வத்தின் தன்மை யாது? "சகடக்கால்போல் வருஞ் செல்வம்" என்று கூறியுள்ளார். ஆகையால் நாம் ஒருவனை செல்வத்தினால் உயர்ந்தவனென்று கருதுவது அறிவுடைமை யாமோ?

அடுத்தபடியாக உயர் குலத்திற் பிறந்தமையினால், உயர்ந்தவ னென்றும், இழிகுலத்திற் பிறந்தமையினால் தாழ்ந்தவ னென்றும் கருதுகின்றனர். நாம் சரித்திரத்தைச் சிறிது ஆராய்ந்து நோக்குமிடத்து, சாதி வேறுபாடு ஏற்பட்டு ஏறக்குறைய 2500 வருடங்களே ஆகியிருக்கலாம். பல்வேறு நாடுகளிலிருந்து நம் நாட்டில் வந்து குடியேறியவர்கள் அவர்களுக்குள் ஜாதி வேறுபாடின்றி ஒழுகிவந்தனர் என்பதை, சரித்திர ஆராய்ச்சியாளர் நன்கறிவர்.

---

லையை மிகச் சிறியதாக்கி விட்டார்கள். ஐரோப்பிய சரித்திரத்தில், மறுபடியும் இந்த லூயி வம்சத்தார் பிரான்ஸில் முடியிழந்து நெப்போலியன் சந்ததியார் மறுபடியும் மூன்றாவது நெப்போலியனாக வாழ்ந்து, முடிவான புரட்சித் தீர்மானமும் முடியரசை யொழித்து ஸ்தாபிக்கப்பட்ட குடியரசுதான் தற்போதுள்ளது என்ற விவரம் விஸ்தாரமாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. ஒருவாறு இனி இங்கிலாந்தில் உள்நாட்டு விவரங்களைப்பற்றிய விஷயங்களைக் குறிப்பிடும் போக்கை இனி அனுசரித்து, அடுத்த கட்டுரையில், பிரஞ்சுப் புரட்சி காலத்தில் பணமுடைக்கு முட்டுக் கொடுத்த "தொழிற் புரட்சி" என்ற விஷயத்தைப் பற்றி எழுதப்படும். பிரஞ்சுப் புரட்சியின் தத்துவங்கள் வாசகர்களின் மனதில் தகுந்த பாடங்களைப் புகுத்தியிருக்க ஆண்டவன் அருள் புரிவானாக!

நாட்டை எதிரிகளி னின்றும் காத்தற்பொருட்டு ஒரு பகுதியும், அன்ன வர்கட்கு, ஊண், உடை இவை கொடுத்தற் பொருட்டு ஒரு பகுதியும், இவர் கட்கு யாதொரு குறைவுமின்றி, சென்ற விடமெல்லாம், வெற்றியுறவும் பொருள் குறைபாடு அடையாதுமிருக்கக் கடவுளை வழிபடுவதற்கு ஒரு பகுதி யும் மேற்கூறிய மூப்பகுப்பினருக்கும், தொண்டு செய்தற் பொருட்டு ஒரு பகுதியும் ஆக, மக்கள் நான்கு பகுதியினராக பகுக்கப்பட்டனர். அவை முறை யே க்ஷத்திரியர், வைசியர், பிராம்மணர், சூத்திரர் என்பவைகளாம்.

இவர்களுள் கடவுளை வழிபட்டு வந்தவரையே அந்தணர் (பிராம்மணர்) என்றும், அவர்களை ஏனையோரைவிட உயர்ந்தவரென்றும் அன்று தொட்டு இன்றுவரை கருதப்பட்டு வருகின்றனர்.

[இந்நாளில் தாழ்ந்தவரென்று கருதப்படுபவர் தீண்டாதார் (Untouchables) என்னும் ஓர் வகுப்பினராவர். இவ்வகுப்பு சரித்திரத்தினுள் ளும் காணப்படாத ஓர் தனி வகுப்பாய் இருக்கின்றது. அஃது பிற்றை நாளில் பிரிக்கப்பட்ட ஒரு வகுப்புப்போலும்.]

மேற்கூறிய, அந்தணர்கள் யாரென்று நோக்குழி, எம்மதத்தினராலும் போற்றப்படும் தமிழ் மறை,

"அந்தணரென்போ ரறவோர் மற்றெவ் வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்."

என்று கூறுகின்றது. அதை ஆராயுமிடத்து அழகிய தண்மையை யுடையவன் அந்தணன் என்பது புலனாகும். இழிகுலப் பிறப்பாளன் என்று கருதப்படும் ஒரு தீண்டாதார் செந்தண்மை பூண்டிருப்பாராயின், அன்னவர் அந்தண ரன்றி வேறாவரோ ?

இழிகுலப் பிறப்பாளரென்று கருதப்பட்ட திருநாளைப்போவார், தில்லை வாழ் அந்தணர் மூவாயிரவராலும் போற்றப்பட்டு கறைமிடற் றண்ணலுக் கும், தனக்கும் வேற்றுமையின்றிக் கலந்தன ரன்றோ ? எக்காரணம் பற்றி? அந்தண்மையாகிய செந்தண்மை இருத்தற் பொருட்டன்றோ? காளத்தி வேட ஞகிய திண்ணனுருக்கு "கண்ணப்பர்" என்னும் பெயர் எங்ஙனம் கிட் டிற்று? அந்தண்மை மிக்கிருந்ததினு லன்றோ? இவர்கள் யாவரும் அந்தண ரென்று அழைக்கப்படுவதற்கு ஏதேனும் ஐயமுளதோ ?

அந்தணன் என்று கருதப்படுகின்றவனின் தொழிலை நோக்குழி, வைக றைத் துயிலெழுது, மறையோதி, மன்றலில் நின்றாடும், அரனுரை வழி படுவதாகும். ஆனால் இக்காலத்திய அந்தணர்களின் தன்மையைப் பார்க்குங் கால் பெரும்பாலும், வைகறைத் துயிலெழுதலை நீத்துக் கதிரவன் ஒளிவீசின தற்குப் பின்னரே துயிலெழுந்து, காப்பி அருந்திப் பின், பல்விளக்கிக் காலை யுண்டி உண்டு, மேனாட்டாரின் முறைப்படி உடையணிந்து, தத்தம் தொழில் நிலயங்களுக்குச் செல்கின்றனர். ஆண்டு, தன்னைவிடக் குறைந்த குலத்தவனு யிருக்கலாம் தனது மேலதிகாரி. அவன் ஒரு பொழுது இவ்வுயர்ந்தோரென்று கருதப்படுகின்ற அந்தணரை தாழ்ந்தவனென்று கூறுவானாயின், அவ்வந்தண ரது மனம் எவ்வாறு இருக்குமென்று எழுதமுடியுங்கொல்? அவன் உண் மையில் உயர்குலப் பிறப்பாளனு யிருந்தும் 'தாழ்ந்தவன்' என்று கூறின், எவ்

வளவோ மனம் வெதும்புகின்றான். பின் இழி குலத்தார் என்று கருதப்படுகின்ற "தீண்டாதாரை"த் தாழ்ந்தவனென்று கூறுவோமாயின் அவன் மனம் எங்ஙிலைப்படு மென்பதை எழுதவும் வேண்டுமோ!

சகோதரர்களே! கடவுள் அவரது படைப்பில் உயர்வையும், இழிவையும் காட்டிற்றிலர். ஓர் உயர் குலத்தவனென்று கருதப்படுகின்ற அந்தணனுக்கிருப்பது போன்று, இழிகுலத்தவ னென்று கருதப்படுகின்றன. தீண்டாதாருக்கும் ஒன்றுபோல் இன்பம், துன்பம், அவா, வெகுளி யாவையும் உண்டு. முன்னவனைப் போலவே பின்னவனும் தசை, எலும்பு, நரம்பு, இரத்தம் முதலியவைகளால் ஆக்கப்படுகின்றான். பின்னவனுக்கும் முன்னவனைப் போன்றே, ஊண், ஊக்கம், பசி உணர்ச்சி, வலி யாவும் ஒரு குறைவுமின்றி உள.

ஆகையால், நாம் ஜாதி வேற்றுமையி னின்றும், உயர்ந்தவ ரென்றும், தாழ்ந்தவ ரென்றும் கூறுவதும் தவறு என்று ஏற்படுகிறதன்றோ!

பின் எதனால் ஒருவன் உயர்ந்தவ னென்றும், தாழ்ந்தவ னென்றும் கருதப்படுகின்றான் என்றால், அவன் ஒழுகும் ஒழுக்கத்தி லிருந்தாகும் ஒழுக்கம் ஒருவனுக்கு இன்றியமையாதது. அது உயிரை விடச் சிறந்ததாம். இதனையே பொய்யா மொழிப் புலவரும், "ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம், உயிரினும் ஓம்பப் படும்" என்று கூறியுள்ளார். ஒருவனுக்கு நல்லொழுக்கமே இம்மையிலும், மறுமையிலும் இசையை நாட்டவல்லது. அந் நல்லொழுக்கத்திற்கு இன்றியமையாதது கல்வி.

கல்வியின் மாண்பு எத் தன்மையதென்பது, யாவரும் அறிந்த விஷயம். மனிதனது இயற்கையறிவு, சாணையில் தீட்டப்பெறாத ஓர் மணி போன்றதாம். அஃதை கல்வி என்னும் சாணையில் வைத்து, ஒளி பெறச் செய்தல் வேண்டும்.

மனிதனுக்குக் கல்வியே கண், கல்வியே பொருள், கல்வியே கற்புடைப் பெண்டிர், கல்வியே மழலைச் சொல் மிழற்றும் இளங் குழவியர், கல்வியே அனைத்துமாம். நமது திருவள்ளுவநாயனாரும் "கல்வி" என்னும் அதிகாரத்தில்,

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தார்"

என்று அனுவைத் துளைத்து, எழுகடலைப் புகட்டும் தன்மைத்தாய், சீரிய நோக்கங்களை சிறிய அடிகளில் இனிமையாகக் கூறிப் போந்தார். இஃது, விரிக்கில் பெருகு மென்றஞ்சி இத்துடன் விடுத்தாம்.

ஒரு மனிதனுக்கு இரு கண்களுள அவைகளுள் ஒன்று 'எண்' மற்றொன்று 'எழுத்து'. இவை இரண்டுமிலையேல், அவனது வாழ்க்கைப் புண்ணெனத் தக்கதேயாம். எங்ஙனம், கண்ணில்லாத ஒரு மனிதன் செல்ல, வழியறியாது காடு, மேடு, பள்ள முதலியவைகளில் விழுந்து அவதியுறுவானோ, அஃதேபோல், எண் எழுத்து என்ற இரண்டு கண்களையும் படையாத மக்கள் விழிக்குருடர்களாய், வாழ்க்கையென்னும் பாதையில் நடக்க வியலாது, அறநெறி தவறி, தீ நெறிக்கண் சென்று அவரது வாணாளை வீண்

னாக்கியும் பாழ்நாளாக்கியும் துன்பெய்துவர். இதில் நின்று, ஒருவனுக்குக் கல்வி எம்மாத்திரம் இன்றியமையாதது என்று நன்கு விளங்குகின்றது.

"எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடி கற்றோரை மேல்வரு கென்பர்."

"கற்றோர்க்கு சென்ற விடமெல்லாம் சிறப்பு"

என்னும் திருவாக்குகளுக்கு இயைய, கற்றவர்களை அவர் எக்குடிப் பிறப்பாளராக இருப்பினும், நன்கு போற்றுகின்றனர். உதாரணமாக, மேனாட்டாரான ஆங்கிலேயர், நம்மவர்களான இந்துக்களினின்றும் தாழ்ந்தவரென்றும், ஸனாதன தர்ம மறிந்தவர்கள் கூறுப. ஆனால், நாம் அவரோடு பழகி அவருக்குச் சமமான இருப்பிடம் கொடுத்து, அவருடன் கை கொடுத்து உடனுண்டு, இன்புறுகிறோம். அது எக்காரணம்பற்றி? அவரது கல்வியின் மிகுதியினா லன்றோ?

நமது காளிதாசன் எக்குடியிற் பிறந்தோன்? இராமாயண காதையியற்றிய கம்பர் எக்குடிப் பிறப்பாளரென்று வரையறுத்துக் கூற இயலுமோ? இவர்கள் மொழியை யெலாம், நாம் பொன்னேபோல் போற்றி அவர்களைப் புகழ்கின்றோ மன்றோ! இவையாவும் அவர் கல்வியா லன்றோ!

ஆகையால் கல்வியி னின்றே ஒருவன், உயர்ந்தவனும், தாழ்ந்தவனும் ஆகிறான். பிறவற்றினின்று "உயர்வும்" "தாழ்வும்" இல்லை யென்பது வெள்ளிடை மலையென விளங்குகின்ற தன்றோ!

---

# சேக்கிழாரும் இயற்கைக் காட்சியும்

(வி. மாணிக்கம் ஐயர்)

உலக ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு இறைவன் களிகூர்ந்து "உலகெலாம்" என அடியெடுத்துதவ, அதனைக் கொண்டு பெரிய புராணம் என்னும் ஒப்பில் பெருங் காவியத்தை இயற்றியருளிய தெய்வப் புலமை சான்றவர் நம்பெருமான் சேக்கிழார். இப்பெருமான் தொண்டர் தம் பெருமையைக் கூறுமிடத்து, அவரவர் தம் நாட்டின் சிறப்பையும் நகரத்தின் நலத்தையும், ஊர்களின் ஒப்பற்ற பெருமையையும் எடுத்து விதந்தோதியிருக்கின்றார்.

அன்னாருக்குக் காட்சி யளித்த இயற்கையன்னை, எல்லாக் காட்சிகளிலும் தெய்வ மணம் வீசும்படியாகவே செய்திருக்கிறார். இஃது அவரது செஞ்சொற் கவிகளால் நன்கு அறியப்படுகின்றது. இதனைச் சிறிது ஆராய்வாம்.

ஓர் உண்மைக் கவிஞனது உள்ளத்தில் இயற்கை யன்னை ஒப்பிலா மகிழ்ச்சியை யுண்டு பண்ணுகிறாள். அது போலவே நம்பெருமான் சேக்கிழாருக்கும் அத்தகைய இன்ப ஊற்றுப் பெருகுகின்றது. அக்காட்சிகளைப் புலவர்கள், பலவிதமாகச் சித்திரித் திருக்கின்றனர். ஆயின் என்ன? நம் புலவர் மாட்டுக் காணப்படும் பெருமை யென்ன? என்னையோ வெனின் அவர் பாக்களி லெல்லாம் தெய்வ மணம் வீசுவதுதான் தனிப்பெருமை.

இந்தப் பெருமையை ஆசிரியர் எவ்வாறு பகலவனிடத்துப் பொருத்துகிறார் என்பது ஈண்டு நோக்கற்பாலது.

"திருக்காளத்தி மலை-காளத்தி யப்பர் இருக்கிறார். பக்கத்தில் கண்ணப்பர், ஊனமுது வைத்துக்கொண்டு, "இது சாலச்சிறந்தது, இனிமையானது, இன்னும் உண்ணும், இன்னும் உண்ணும்" எனக் கழிபெருங் காதல்கூர உபசரிக்கின்றனர். கதிரவன் காண்கின்றனன். "ஆ! என்னே இவரது அன்பின் திறம்" என வியக்கின்றான். இவரை வணங்குவதுதான் நமது பாக்கியம் என நினைக்கின்றான். நல்லவேளையாக, நமக்கு எண்ணிறந்த கைகள் இருக்கின்றன என மகிழ்கின்றனன். கரங்களைக் கூப்பி மலையை வணங்குகின்றனன்" இதுவே கவியின் சித்திரம். (ஆனால் சூரியன் அஸ்தமிக்கிறான் என்பதுதான் இங்கு உள்ளது.) இதை,

"அன்னவிம் மொழிகள் சொல்லி யமுதுசெய் வித்தவேடர்
மன்னனார் திருக்காளத்தி மலையினார்க் கினியநல்லூ
னின்னமும் வேண்டுமென்னு மெழுபெருங் காதல்கண்டு
பன்னெடுங் கரங்கள்கூப்பிப் பகலவன் மலையிற்றாழ்ந்தான்."

என்ற செய்யுளில் வெகு அழகாகக் குறிப்பிடுகின்றார்.

இம்மாதிரியான சித்திரங்கள் இன்னும் பல இடங்களில் காணப்படுகின்றன. ஆயினும் இரண்டிடங்களைக் குறித்துவிட்டு இதைப்பற்றி நிறுத்திக் கொள்வோம்.

வேதநெறி தழைத்தோங்க, சைவம் வளர, நந்தியம் பெருமான் குரு பரம்பரை விளங்க, உலகுய்ய வந்த சம்பந்தர் மாறன் பாடியை அடைகின்றனர். தந்தையின் தோண்மிசையன்றி, தாளால் நடந்துவந்ததைப் பொறாத எம்பெருமான், அவருக்கு முத்துச்சிவிகை கொடுக்க எண்ணியிருக்கின்றனன். மாலைக்காலம். சூரியன் மேல்கடலில் ஆழ்கின்றனன். இதனைக் கவி சமத்காரமாக எப்படி அமைக்கிறார் பாருங்கள்.

'சம்பந்தப் பெருமானுடன் வந்த அடியார்கள் தனது வெம்மையைப் பொறாது வருந்துவார்களே. அப்படியாயின் அடியார் படுந்துன்பந் துடைக்க வல்ல ஞானசம்பந்த வள்ளல் நம்மைக் கோபிப்பரோ என்று அஞ்சி தனது ஆயிரம் கைகளையும் வாங்கி ஒளித்துக்கொண்டு மேல்கடலில் மறைந்தனன்' எனக் கவி கூறுகிறார். அஃது கீழ்வரும் செய்யுளில் அமைந்து கிடப்பதைப் பாருங்கள்:

"உய்யவாத சம்பந்த ருடன் வந்தார்க்
கெய்து வெம்மை யிளைப்பஞ்சி னன்போலக்
கைக ளாயிரம் வாங்கிக் கரந்துபோய்
வெய்யவன் சென்று மேல்கடல் வீழ்ந்தனன்."

இனி, இப் பெருமானே சூரிய உதயத்தை வெகு அழகாகக் குறிக்கிறார். முதல் மாலை மேல்கடலில் ஆழ்ந்த வெய்யவன் மறுநாட் காலை கிழக்கில் தனது பரந்த கிரணங்களைப் பரப்பிக் கொண்டு தோன்றுகின்றான். ஞானசம்பந்தப் பெருமானுக்கு முத்துச் சிவிகை வந்துளது. புகலிப் புனிதரைச் சிவிகையின் மேல் ஏற்றிக் காண வாசைப் பட்டவன் போலக் கருங்கடலில் தோன்றினன் பகலவன் என்று கூறும் கவியின் திறம் தான் என்னே! தன் மகன் முடி சூடப் போகிறான். அதை நாம் பார்க்க வேண்டுமென்று ஆசையுடன் கதிரவன் தோன்றினன் என்று கம்பர் சுக்ரீவ பட்டாபிஷேகத்தைக் குறிக்கின்றார். இங்கு இவர் உலகின் தன்மையைத் தான் சேர்த்துக் கூறினார். ஆனால் நம் சேக்கிழாரோ, புகலிப் புனிதரை, உலகு உய்விக்க வந்த வள்ளலைச் சிவிகை மேல் ஏற்ற வந்தனன் எனக் கூறுமுகத்தான் தெய்வ மணத்தைப் பொருந்த வைக்கின்றனர். அக்கவி:—

"போத ஞானப் புகலிப் புனிதரைச்
சீத முத்தின் சிவிகைமே லேற்றிடக்
காதல் செய்பவன் போலக் கருங்கடன்
மீதுதே ரின்வர் தெய்தினன் வெய்யவன்" என்பது.

இனி, காளத்தி மலையில் இரவே எப்பொழும் கிடையாது என்று கூறுமிடத்துக் காரணங்கள் காட்டுகின்றார். அப்பொழுது அம் மலையின் கண் உள்ள மரங்கள் தீப்பற்றிக் கொண்டு எரிவதா லுண்டாகும் ஒளியும், மந்திகள் குகைகளில் வைத்திருக்கும் செய்ய மணிகளின் ஒளியும் கூடியிருப்பதோடு, எக்காலும் இறைவனை மறவாத தவயோகிகளின், ஜிதேந்திரியர்களின் காந்தியும் கூட, அம் மலையில் இரவில்லாமல் செய்தது என்று குறிப்பிட்டார். இங்கு தெய்வமணம் வீசும் யோகிகளின் காந்தியையும் சேர்த்தார்.

இவ்வாறு சேக்கிழார் எப்பாடலிலும் தெய்வ மணம் வீசும்படி பாடும் இயல்புடையவரென்பது நன்கு போதரும். இதிலிருந்து நம் பெருமான் சேக்கிழாரின் மனப்பான்மையும் அறியப்படுகின்றதன்றோ!

# நம்பிக்கையின் சக்தி

(S. S. ராமாநுஜ நாயுடு.)

நாம் ஒரு விஷயத்தைப் பற்றியோ, பதார்த்தத்தைப் பற்றியோ, அல்லது ஒரு மனிதனைப் பற்றியோ ஒருவித அபிப்பிராயம் அல்லது நம்பிக்கை உடையவர்களாய் இருந்தால், அதை மாற்றுவது வெகு கஷ்டமாகும். இது மனதினுடைய ஓர் அபூர்வ சக்தியாகும். இந்த சக்தியைக் கொண்டு நாம் மகத்தான காரியங்களையும் சுலபமாகச் செய்து முடிக்கலாம். இதனையே செந்நாப் போதாரும்,

"எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்"

என்றார்.

நம்பிக்கையினால் மோக்ஷ சாதனமும் எளிதாகும்; சகல கஷ்டங்களையும் நிவர்த்தி செய்து கொள்ளலாம். உதாரணமாக, மெஸ்மெரிஸம் என்னும் மனோவசிய சக்தியால் வியாதிகளைச் சொஸ்தம் செய்வதும் இதனால் தான் சாத்தியமாகிறது. இந்த சக்தியால் வியாதியஸ்தன், தனக்கு வியாதி போய் விட்டதென்னும் எண்ணத்தைப் பலமாக வற்புறுத்துவானானால், வியாதி போய் விடுகிறது. இங்கே நம்பிக்கை வியாதியைச் சொஸ்தம் செய்கிறது.

இதே விதமாகவே ஆத்ம சொரூபியாகிய நாம் "நான் அழியுந் தன்மையுள்ள இந்த ஸ்தூல சரீரமல்ல; நித்ய வஸ்துவாகிய ஆன்மாவே நான்" என்னும் எண்ணத்தைப் பழக்கத்தாலும் விடா முயற்சியாலும் மனதில் வேரூன்றச் செய்து விட்டால், மனம் எளிதில் அடங்கி, ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்தை அடைய சாத்தியமாகிறது. இங்கே நம்பிக்கையானது ஜனன மரணப் பிணிக்கே மருந்தாகிறது.

நாம் நம்பிக்கையால் நன்மை யடைவதுபோல் நம்பிக்கை யின்மையால் கஷ்டத்தை யடைகிறோம். மனோ பீதியும், நம்பிக்கையின்மையும் நோய்க்குக் காரணமாகின்றன. நம்பிக்கை யின்மையால் ஏற்படும் நோய்களுக்கு எவ்வித மருந்தும் பயன்படாது என்பது வைத்திய சாஸ்திரிகளின் துணிபு. சில பெரியோர்கள், சில குறிப்பிட்ட இடங்களில் பேய் பிசாசுகள் இருப்பதாகவும் அங்கே போகக் கூடாதென்றும் சொல்லி சிறுவர்களைப் பயமுறுத்துகின்றார்கள். இது பெருந் தவறாகும். ஏனெனில், தற்செயலாய் அச்சிறுவன் அவ்விடங்களுக்குப் போகும்படி நேர்ந்தால் அவன் அம் மனப் பீதிக்கே இரையாய் விடுவான் என்பது திண்ணம். இதற்குத் திருஷ்டாந்தமாகச் சில உதாரணங்கள் காட்டுவோம்.

ஓர் ஊரில் ஒரு சிறுவனை அவன் பாட்டியார் அவ்வூர் ரஸ்தாவில் இருக்கும் ஆலமரத்தில் முனி இருப்பதால் அங்கே போகக் கூடாதென்று எச்சரிக்கை செய்திருந்தாள். ஒரு நாள் மாலைப்பொழுதில் அச்சிறுவன் அங்கே தனியே சென்றபொழுது தன் பாட்டியின் சொல் ஞாபகத்திற்கு வந்ததால் உடல் நடுங்கிற்று. சுற்று முற்றும் பார்த்தான்; ஒருவருமில்லை. அம்மரத்தைப் பார்த்தான். அச்சமயம் காற்றினால் சில இலைகள் அசைந்ததால் பயத்தினால் கீழே விழுந்துவிட்டான். பயத்தினால் விழுந்ததால் மூளை கெட்டுப் போய் வாயிலிருந்து இரத்தம் கொட்ட ஆரம்பித்தது. பிறகு அவன் தாய் தந்தையர் அவனைக் கண்டு, சமீபத்திலிருந்த ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய் எவ்வளவோ சிகிச்சைகள் செய்தும் இரத்தப்பெருக்கு நிற்காமல் சில மணி நேரத்தில் இறந்து விட்டான். அந்தோ! பரிதாபம். அச்சிறுவன் தன் மனப்பீதிக்கே பலியானான் என்பதில் ஐயமுண்டோ! ஆனால் அவ்வூர் ஜனங்கள் வழக்கப்படி "பையன் காத்து சேட்டையால் பயந்துபோய் விட்டான்" என்று சொல்லிக் கொண்டார்கள்.

இம்மாதிரியே, ஓர் ஊரில் கிழவி ஒருத்தி இருந்தாள். அவளுக்குப் பாம்பென்றால் உயிர் போய்விடும். இதையறிந்த அவ்வூர் சிறுவர்கள் அவளைக்கண்ட போதெல்லாம் பரிகசிப்பது வழக்கம். ஒருநாள் அக்கிழவி வீதியில் போய்க் கொண்டிருந்த பொழுது ஒரு சிறுவன் அவளை ஏமாற்றும் பொருட்டு திகில் உண்டாகும்படி "ஐயோ! கிழவி; பின்னால் பாம்பு" என்று கத்தினான். கிழவி பயத்தினால் திடீரென்று கீழே விழுந்து இறந்து போனாள். கிழவியின் மரணத்திற்குக் காரணம் சிறுவன் ஆனதால், அவனைப் போலீசார் பிடித்து அவ்வூர் நியாயாதிபதியிடம் கொண்டு போனார்கள். நியாயாதிபதி அவனைப் பீரங்கிவாயில் வைத்துச் சுட்டு விடும்படி தீர்ப்பு செய்துவிட்டார். ஆனால், அவனைப் பீரங்கி வாயில் வைத்துக்கட்டி, மற்றொரு பீரங்கியில் சப்திக்கும் மருந்து வைத்து, அதைச் சுடும்படி ரகசியமாக ஏற்பாடு செய்திருந்தார். அச்சிறுவனோ, பீரங்கியின் சப்தம் கேட்டுத் தன்னைக் கட்டியிருக்கும் பீரங்கியின் சப்தமென்று எண்ணி பயத்தால் இறந்து போனான்.

ஒரு நாள் இரவு ஒருவன் வேகமாக நடந்து போகையில் ஓர் பிளந்த மாங்கொட்டை அவன் காலில் கவ்விக்கொண்டது. அவன் அதைப் பாம்பென்று நினைத்துத் தாண்டி, அருகில் இருந்த வைக்கோல் பிரியின்மேல் குதித்தான். அப்பிரியைப் பார்த்ததும் காலில் கடித்தது பாம்பென்று நிச்சயங்கொண்டு, வீட்டிற்கு வந்து அம்மாதிரியே சொல்லிப் படுத்துக்கொண்டான். உண்மையாய்ப் பாம்பு கடித்ததுபோல் மயக்கம் போட ஆரம்பித்துவிட்டது. வீட்டிலிருந்தவர்கள், பாம்பு கடித்த இடத்திற்குப் போய் பார்த்ததும் கடித்தது மாங்கொட்டை யென்று தெரிந்தது. ஆனால் அவனிடம் சொல்லியும் அவன் நம்பவில்லை. அவனுக்கு நேராகக் காண்பித்து, நாளுக்கு நாள் அவன் சொஸ்தமடைந்து வருவதாகத் தேறுதல்கள் சொன்னதால் நெடு நாள் கழித்து அவனுக்குச் சொஸ்தமாயிற்று. தப்பான நம்பிக்கையால் அவஸ்தைப்படுவதற்கு இது ஓர் உதாரணமாகும்.

ஒரு பிரபுவின் குமாரன் அஜீர்ண ரோகத்தால் நெடுநாள் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தான். எத்தனையோ டாக்டர்கள் இதைச் சொஸ்தம்

செய்து பார்த்தும் பயனில்லாமல் போய்விட்டது. இதன் உண்மையான காரணத்தை யறிந்த ஒரு டாக்டர், ஒரு டென்னிஸ் குடுப்பில் ஏதோ ஓர் மருந்தைப்பூசி இதனால் தினந்தினம் உடம்பு வியர்க்கும்படி பந்தாட்டங்கள் ஆடினால் உன் அஜீர்ணரோகம் நீங்கும் என்று சொல்லித் குடுப்பைக் கொடுத்தார். அவன் தினந்தவறாது அப்படிச் செய்து வரவே, ஒரே மாதத்தில் அவன் வியாதி பறந்து போய்விட்டது. சாதாரணமான குடுப்பினால் விளையாடி யிருப்பனும் சௌக்ய மடைந்திருப்பா னாயினும் டாக்டர் கொடுத்த குடுப்பிலிருந்த மருந்துதான் குணப்படுத்துமென்ற எண்ணத்தினால் தான் விளையாடினான்.

ஒருவன் எவ்வளவு தைரியம் உள்ளவனாக இருப்பினும், அவன் ஒரு தப்பான நம்பிக்கையைக் கைக்கொண்டால், அவன் விரைவில் அதனால் துன்ப மடைவான். இதற்கு எடுத்துக் காட்டாக, ஒருவன் தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கையில், மேலே சாத்தில் ஓடிக்கொண்டிருந்த ஒரு பல்லியின் பிரதி பிம்பத்தைத் தான் குடிக்கும் தண்ணீரில் கண்டான். ஆகையால், பல்லியோடு தண்ணீரைக் குடித்துவிட்டதாக எண்ணிக்கொண்டு, வாந்தி, ஒக்காளம் முதலியவற்றால் கஷ்டப்பட்டான். வைத்தியர்களால் இதைச் சௌகர்யப்படுத்த முடியவில்லை. இரண்டு மாதம் கழித்து ஒருவன் வந்து சமாசாரத்தைக் கேட்டு, இது தப்பான நம்பிக்கையின் பயன் என்று எண்ணி, மறுநாள் வாந்தி யெடுக்கும் மருந்து கொடுத்து வாந்தி யெடுத்துக் கொண்டிருக்கும் சமயத்தில் தன் கையில் பிடித்து வைத்திருந்த பல்லியைப் போட்டு விட்டுப் பிறகு அதையே எடுத்துக் காட்டினான். மருந்தின் வேகத்தினால், பல்லி தன் வயிற்றிலிருந்து வந்து விட்டதாக எண்ணினதினால், அவனுக்குச் சௌஸ்தமாகி விட்டது.

நோயாளருக்கு அதைரியத்தை உண்டாக்கும் வார்த்தைகள் சொல்லக் கூடாது; அவர்கள் காதில் படும்படி பேசவும் கூடாது. ஏனெனில், அவர்கள் அதை நம்பி, மனம் வருந்திக் கஷ்டப்படுவார்கள். எவ்வளவு திடகாத்திரனாயினும், தப்பான நம்பிக்கையும், மனப்பீதியும் உண்டாகும் பொழுது, மயங்கித் தன்னிலை கெடுவான் என்பதில் சந்தேகமில்லை. உதாரணமாக ஓர் ஊரில் ஒருவனை அவன் நண்பர்களில் சிலர் அவனைக் கண்ட பொழுதெல்லாம், "ஐயோ, பாவம்! என் இப்படி மெலிந்து போய்விட்டாய்?" என்று பரிகாசமாக அடிக்கடி கேட்டுக்கொண்டு வந்ததால் அவன் தான் மெலிந்து போய்க் கொண்டிருப்பதாக நினைத்து, அதனால் மனசஞ்சலமடைந்து, நாளுக்குநாள் மெலிந்து, முடிவில் இறந்தான்.

இத்துணையுங் கூறியவாற்றால், தப்பான நம்பிக்கை யுண்டாகும்படி சிறுவர் முன் பேசுவதும், தப்பான நம்பிக்கையில் மனதைச் செலுத்துவதும் ஆபத்துக் கிடமாகும் என்று தெரிகிறதல்லவா? இந்த நம்பிக்கையின் ஆச்சர்ய மான சக்தியை அறிந்த நம் முன்னோர்கள் இவைகளுக்குப் பரிகாரமாக "சுத்தி கொட்டுதல்" அல்லது திருஷ்டி பரிகாரம் செய்தல் போன்றவைகளை அனுஷ்டித்து, தப்பான நம்பிக்கையினாலும், மனோபீதியினாலும் கஷ்டப்படுபவர்களின் மனதிற்கு அமைதியை உண்டாக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

இனி நம்பிக்கையின் உதவியால் ஏகாக்ர சித்தநிலையை உபயோகித்து எல்லாவித துர்க்குணங்களும் நம்மைவிட்டு விலகும்படி செய்து நம்மனத்தை எப்படிப் பரிசுத்தம் செய்து கொள்ளலாமென்று ஆராய்ந்து பார்ப்போம், மனோதத்துவ சாஸ்திரத்தின் திட்பநுட்பங்களை ஆராய்ந்து பார்க்கப்பார்க்க, சரீரத்திற்கும் மனதிற்கும் அநேக விதங்களில் ஒற்றுமை யிருப்பதாகத் தெரிகிறது. ஆகையால் சரீரத்தை நல்ல நிலைமையில் வைத்துக்கொள்ள விரும்புகிறவர்கள் தங்கள் மனதை, நல்ல நிலைமையில் வைத்துக்கொள்ள வேண்டும். மேலும், மனிதனுடைய ஆத்ம லாபத்திற் காதாரம் அவன் கருதும் எண்ணங்களாகையால், இகபர சாதனங்கள் இரண்டிற்கும் மனோபரிசுத்தம் இன்றியமையாததாகும். பாம்பு நிறைந்த வீட்டிலுள்ளோர் ஜாக்ரதையா யிருப்பது போல, காமக்குரோத முதலிய பகைவர்களிடம் அகப்படாமல் மனிதன் ஜாக்ரதையாய் இருக்கவேண்டும். எப்பொழுதும் ஜாக்ரதையாய் விழித்துக் கொண்டிருப்பவர்களின் வீட்டில் திருடர்கள் நுழைய முடியாததுபோல், நாமும் எப்பொழுதும் ஜாக்ரதையா யிருப்போமாகில் எவ்வித தீய எண்ணமும் மனதில் பிரவேசித்து நம்மைக் கெடுக்க முடியாது. ஆனால், ஆரம்பத்தில் இது கஷ்டமாகத் தோன்றும். எனினும், காமம், கோபம் முதலிய துர்க்குணங்கள் நம்மனதில் எழக்கண்ட மாத்திரத்தில் அவற்றிற்கு அனுசரணையா யிருந்து மூட்டிவிடும் விஷயத்தை உடனே மனதை விட்டகற்றிவிட வேண்டும். இப்படிச் செய்துவந்தால், புசிகாணமில்லாத நெருப்புத் தானே அவிந்து போவதுபோல், துர்க்குணங்கள் நாளடைவில் நிர்மூலமாகிவிடும். அதுவரையில், காமக்குரோத முதலியவற்றால் ஏற்படும் மனத்துடிப்பைச் சகிப்பதற்கு மனிதன் பழகவேண்டும். விஷயங்களை வெறுப்பதாலும் விடா முயற்சியாலும் இது சாத்தியமாகும்.

இதோடுகூட, துர்ச்சுபாவ நடவடிக்கைகளால் ஏற்படும் கெடுதிகளைப் பற்றி சிறிதுநேரம் அமைதியிலிருந்து தியானித்துவிட்டு, உறுதியான ஒரே நிச்சித்தத்தின் வல்லமையால் அவற்றை மனதை விட்டகற்ற வேண்டும். எப்பொழுதும் மனதில் சந்தோஷகரமான விஷயங்கள் மட்டும் பதிந்திருக்க வேண்டுமென்றும், அபரிசுத்தமான விஷயங்கள் அகன்றிருக்க வேண்டுமென்றும் தீர்மானித்துக் கொள்ளவேண்டும்.

மனிதன் நினைத்திராத வேளையில், அவனறியாமலே, அவன் மனதின் அசுசியான அல்லது மனக்கிலேசத்தை உண்டாக்கக்கூடிய விஷயங்களோ உருவங்களோ திடீரென்று தோன்றுவது சகஜம். அச்சமயத்தில், அவன் அவற்றை உடனே உதறித் தள்ளிவிட்டு மனதை வேறு விஷயங்களில் செலுத்த வேண்டும். இது கஷ்டமான காரியமல்ல. இதே விதமாய் நமக்குத் துன்பத்தையும், மனோ வியாகுலத்தையும் உண்டாக்கக் கூடிய எந்த விஷயத்தையும் க்ஷணப்பொழுதில் மனதை விட்டகற்றுந் திறமையை யடைந்து விடலாம்.

நாம் மனதில் தூய எண்ணங்களுக்கு மட்டும் இடங் கொடுப்போமாயின், அவ்வெண்ணங்கள் தமது காந்தக் கவர்ச்சியினால், நம்மைச் சுற்றிலுமுள்ள தூய எண்ணங்களையும், மனோகரப் புண்ணியங்களையும் நம்மிடம் இழுத்துக்கொண்டு வருகின்றன. நாம் பழக்கிய புறுவானது, தூர இடங்

களுக்குச் சென்று, மற்றப் புருக்களை இழுத்துக்கொண்டு வருவதுபோல், புண்ணிய சித்த முள்ளவர்களுக்கு மற்றவர்களின் புண்ணியங்களும், நல்லெண்ணங்களும் வந்துதவும். "இனம் இனத்தைத் தழுவும்" என்று முதுமொழியும் சொல்லுகிறதல்லவா? இதைப் போலவே துன்மார்க்கன் தன் துன்மார்க்கத்தில் வளருகிறான்.

ஆரம்பத்தில் கஷ்டமாக இருந்தாலும் நம்முடைய அற்ப ஆசைகளில் அல்லது வழக்க ஒழுக்கங்களில் ஏதேனு மொன்றை நிறுத்தப் பிரயாசைப் படவேண்டும். நமக்கின்பமான ஏதேனு முணவை, பொடியை, அல்லது குடியை முதலாவதாக நிறுத்திக்கொண்டு:—"எனக்கின்பம் விளைத்த அசனமே! பானமே! வழக்கமே! இன்று முதல் உன்னை நான் வெறுத்து விட்டேன். உன் இன்பம் எனக்கு வேண்டாம்" என்று அநேகந் தடவைகளில் உச்சரிக்க அவ்வெண்ணம் மனதை விட்டகலும். ஒரு நாளைக்கு உணவைத் துறந்து உபவாசமிருப்பது கஷ்டங்களைச் சகிப்பதற்கும் நம்பிக்கையின் சக்தியை விர்த்தி செய்வதற்கும் சாதனமாகும். மேற்சொன்ன உபாயங்களில், மனவடக்கம் எய்திய மனிதனிடம் உலகம் ஓடிவரும். இவ்வுலகத்திலுள்ள சகலவித நன்மைகளும், புண்ணியங்களும், ஆசீர்வாதங்களும், தன்னடக்கமும், தன்னம்பிக்கையுமுள்ள மனிதனைப் புடை சூழ்ந்துகொள்ளும். தன்னம்பிக்கை யுள்ளவனிடம் சகல சக்திகளும் வந்து சேரும். இவ்வளவு உபயோகமான தன்னம்பிக்கையை அடைவதற்கு உபாயம், மனோபலமும், திடச்சித்தமும், மனோற்சாகமும்தான். இவ்விதமாகத் தன்னம்பிக்கையை விர்த்தி செய்து வருவதுடன், கடவுளிடத்திலும் நம்முடைய நம்பிக்கையை நாளுக்கு நாள் முதிரச் செய்து அவருடைய திருவடிக்குப் பாத்திர ராவோமாக.

# தந்தை பிரிவால் தனயன் வாடல்



(ஆர். வி. இராமசாமி ஐயர், பி. ஏ., பி. எல்.)

சீரார் புகழ்ந்திடும் சுகவனன் உறைபதியாம்
தேரா ரதிகமிலாச் செழிப்புடைய மாநகராம்
ஓரா ருண்மையதை யுள்ளபடி யவர்க்குரைக்கும்
நேரார் பலருறையும் நற்சேல நகரதுவே. (1)

சீருடைய செழுநகராம் சேலமதின் குணபால்நல்
லோருடைய உறைவிடமாம் ஊழிதொட்டு நற்குணரெல்
லோருடைய பதியதுவாம் பாசமுடன் தனையடைபல்
லோருடைய பசிகளையும் பான்மையது இராசிபுரம். (2)

அப்பதிக்கப் பாலுள்ள அகன்ற நற்பாரிடத்தில்
எப்பதிகளிலு மேலாய் இரந்தவர்க் கீதலன்றித்
தப்பின ரவர்கள்வந்து கேட்கினும் தளராதீயும்
ஒப்பிலா மலையொன்றுண்டு நற்றவர்க் குற்றவீடாய். (3)

உற்றவர் தொழுது ஏத்தும் உயர்ந்தவர் புகழ்ந்து பாடும்
கற்றவர் நித்தம் போற்றும் களியொடு மகிழ்ந்து சூழும்
நற்றவர் நாடி நிற்கும் நிமலன்தாள் பற்றியருள்
பெற்றவர் அகலாதுள்ள பெருமையது நயினா மலையே. (4)

சிறந்தநல் மலையதன்மேல் பரந்ததன் கோயில் கொண்டான்
மறந்தன ரெனினு மன்பர் மனமது அகலா நிற்பான்
பிறந்தவ ரெவர்தாமாயின் அவருயிர் அளித்துக் காத்து
இறந்தவரேனு நல்லோர் இனிதுறை பதமளிப்பான். (5)

அயன் மகிழ்ந்தேத்து மையன் அரக்கரை அழித்த மெய்யன்
உயர்வர நின்று எல்லோருயிரையும் காக்கும் தூயன்
மயக்கங்க ளறுத்துயர்ந்த மாதவர் போற்றி நிற்கும்
கயத்தினில் கரியைக் காத்த நற்கதியினைக் கொடுக்கும் மேலோன். (6)

மலையதிற் குகையொன்றுள்ளே மனத்தையோர் நிலையிறுத்திக்
கலைபல போற்றும் கண்ணன் கழலினைக் கருத்துள் வைத்து
நிலையிலா உலகை நோக்கான் நித்தலும் பழமபாலுண்டு
வலையிந்த பாசபந்தம் நலிந்திடாவாறு நின்றான். (7)

அந்தணர் குலத்து மிக்கோன் அருமறை யுணர்ந்த மெய்யன்
தந்துயர் பெற்ற சீலன் தவமது கொண்டு நின்றோன்
வந்தனை செய்து மேலோன் மெய்ப்பதம் போற்றிநாளும்
சிந்தனை கொண்டுயர்ந்தோன் சீர்மிக்க வரதராஜன். (8)

பண்டை நாள் வினைகள்சூழப் பரிசனர் கேட்டவாறே
கொண்டனன் நஞ்சாம் மாதை மாயையின் சூழ்ச்சியாலே

விண்டனன் மனமும் நின்ற கோலமும் நீக்கிப் பின்னர்
கண்டனன் வாழ்க்கை நாளும் உலகினில் கலங்கித்தானே. (9)

உற்ற நோய் கொஞ்சமல்ல உளமகிழ்ந் தைய னீந்த
பெற்றிடற்கரிய பஞ்சப் பிணியினில் பலபாடுற்றும்
சற்றுமே மனவயர்சசி சலிக்க மேலுறுவ தின்றிப்
பற்றும் சன்மார்க்கம் பற்றிப் பலநாளும் கழித்திட்டானே. (10)

இல்லறத்திருந்த நாளும் நன்னெறி விலகி நில்லான்
பல்லறம் தானும் செய்து பாலர் எண்மரையும் பெற்று
நல்லறம் பலர்க்குமோதி நயந்தவரீந்த கொண்டு
கல்மலை நின்றநாளைக் கனவிலும் மறவா நின்றான். (11)

எண்மரம் மைந்தர் தம்முள் எஞ்சினர் அறுவராவர்
மண்ணினை யுணர்ந்தமாத ரிருவர்தா மவருள்ளாகும்
விண்ணவர் போற்றி நின்ற வாதனும் மண்ணை நீக்க
எண்ணெழுத் துணர்ந்த மைந்தர் கலங்கியே நின்றார் பின்னே. (12)

புத்திரர் நால்வருள்ளும் புகழுடன் படித்தோன் கண்ணன்
மித்திரராகப் பன்னாள் கழித்தனர் உலகுகக்க
உத்திரவாத மிக்க அரசியல் பதவி பெற்று
பத்திர வாயிலாகப் பிரிந்தனர் கலியின் கூற்றால். (13)

மைந்த ரந்நால்வ ருள்ளும் முதலது அடுத்தவெந்தன்
தந்தையும் தயங்கி நின்றான் தாங்கொணாத் துயருமுற்றான்
வெந்தனன் உற்றோர் செய்த சூதினால் இளைத்துவாடி
பந்தனை யறுத்துயர்ந்தோன் பதத்தினைவேண்டி நின்றே. (14)

மருந்துண்டு வினையறுக்கக் கந்தனின் வேலால்தானே
மருந்துண்டு பிறப்பொழிக்க அவனடிபற்றி நிற்கில்
மருந்துண்டு உம்பராக ஆறெழுத் தோதலாலே
மருந்துண்டோ மகிதலத்தில் மனப்பிணி மாற்றத்தானே. (15)

உண்மையதை நீயறிவாய் உத்தமனே நித்தியனே
கண்ணவனே உலகினரைக் காக்குமுதற் கலையினனே
எண்ணரிய கவலையதும் எங்கிநின்று பிணியுழன்றும்
மண்ணறிய மனமழுங்கி வஞ்சனைக்கு உயிர்கொடுத்தான். (16)

கந்தனை வெந்த நாளும் கலங்கியே கழித்த நாளும்
வந்தனை செய்தநாளும் வழிபட்ட நாளும் போக
நொந்தனை யடைந்து நாளும் நோயினால் நலிதலுற்றேம்
சிந்தனை கொள்ளத் தந்தை சிவபதமடைந் திட்டானே. (17)

பாரினை யாண்ட மன்னன் ராமனைப் பிரிந்து மாண்டான் (சிற்)
றாரினையாண்ட எந்தை பிரிந்தெமைக் கண்துஞ்சுற்றான்
சீரினையளிக்கும் கந்தா நம்பினோர் வஞ்சஞ் செய்தார்
நேரினை எமக்குத் தாராய் விதியதின் சாபம் மாற்றி (18)

நன்றியை மறவா ருய்வர் நலங்கெட அழிவரந்த
நன்றியைக் கொன்ற மாந்தர் நயனமூன் றுடையான் மைந்தா
கன்றிய மனத்தோ டுந்தன் கழலிணைப் பற்றியந்நாள்
நன்றினித் தாராய் உந்தன் அருளொளி யென்றே மையா. (19)

கெடுவர் கேடெண்ணுவோரே கெடுவர் நயவஞ்சகத்தோர்
கெடுவரப் போலிவேடர் கெடுவரகம் புறம்வேறுமாவோர்
கெடுவரக் கடின நெஞ்சர் கெடுவர் செருக்குற்றோரும்
கெடுவரிப் பாதகர்தாம் கந்தனே உன்னிணையாலே. (20)

கலங்கிய காலந்தன்னில் கைகொடுத் துதவிசெய்தான்
பலகலை யுணர்ந் துயர்ந்தோன் தந்தையின் தம்பி கண்ணன்
நலம்பல அவனுக் குத்தா நாதசம்பந்த நேயா
சிலநல் வாழ்வு முற்றுச் சிறப்புடன் நீடுவாழ்க. (21)

காலத்தில் செய்த நன்றி மறப்பவர் நிரையம்போவர்
காலத்திற் செய்ததற்குக் கைம்மாறு முண்டோ செய்ய
காலத்தி லெம்மைக் காத்தல் கந்தனுன் கடமையன்றே
காலத்தில் காத்தோன் தன்னைக் காப்பதுன் பாரமையா. (22)

ஆங்கிலக் கல்விகற்றும் அழகிய பட்டம் பெற்றும்
தாங்கொணாத் துன்பமந்த தந்தையின் பிரிவாலுற்றும்
ஓங்கிய புகழோன் தந்தை இளையலின் மயிலையில்லில்
பொங்கிய அ(ண்)ணலைத் தூற்றிக் கழித்தன னுண்டோ ரைந்தும். (23)

இழந்தன னிடையி லோர்கால் சோரர் பொருள் கவர்ந்துமே
உழந்தனன் துன்பமப்போ துயர்மனம் தவித்து நிற்க
பழந்தனை விரும்பியோடிப் பழனியி லுறையும் கந்தா
கழந்தனி லுழல நானும் கனியொன்றை யீந்தாயப்போ. (24)

கனியது பெற்றபின்னர் கலங்கினேன் சின்னாளப்போ
கனியிலா மொழிகளங்கு சூழ்ந்துளோர் கூறலாலே
கனிதல்நீ கொள்ளாயென்னில் கரையின்பம் காணேன் கந்தா
கனித்திடுன் னருளையெந்தன் கதியற்ற வாழ்வி லையா. (25)

கனியது விசாலமாகும் நனிநிறை வேற்ற சிம்மக்
கனியது பெற்றுச் சின்னாள் வருந்திப்பின் னவ்வருட்
கனியது கவர்ந்த தெந்தன் மனவழி மகிழ வேயக்
கனியதுகொண்ட தேற்ற கதியினை யறிந்து கந்தா. (26)

முருகனே உந்தன்பாதம் விரும்பியே நின்றான் தந்தை
முருகனே உந்தன் பாதம் விரும்ப எமக்கறிவு மீந்தான்
முருகனே உன்னைப் போற்ற உருவொன்றை யாக்கித் தந்தான்
முருகனே உன்னை ஓம வூரினில் அமைத்துச் சென்றான். (27)

---

# புராணப் புதையல்கள்

(V. சங்கர ஐயர்.)

## தேவீ மஹாத்மியம்.

ஆறுவது அத்தியாயம்.

**மஹரிஷி சொல்வது (1-4)**

இவ்வாறு தேவி சொன்னதைக் கேட்ட தூதன் அதிகக் கோபத்தோடு கூட தைத்ய ராஜனிடம் சென்று விவரமாக நடந்தவைகளை யெல்லாம் தெரிவித்தான். தூதனுடைய வார்த்தைகளைக் கேட்டு குபிதனான அஸுரராஜன் தூமிரலோசனன் என்ற தைத்ய நாயகனோடு சொன்னதாவது, "ஹே தூம்ரலோசன! நீ வேகமாக உன் சைன்யத்தோடு கூடச் சென்று அந்த துஷ்டையை சிரோருஹத்தைப் பிடித்து இழுத்து இங்கே கொண்டுவா—அவளைக் காப்பாற்றுவதற்கு தேவரோ, யக்ஷர்களோ, கந்தர்வர்களோ, இன்னும் யார் வந்தாலும் சரி, அவர்களை யெல்லாம் கொன்று விடு"

**மஹரிஷி சொல்லியது (5-7)**

ஸும்பாஸுரனால் அனுப்பப்பட்டு அந்த தூம்ரலோசனன் அறுபதினாயிரம் அஸுரர்களோடு கூட அதிக வேகமாகப் புறப்பட்டான். அவன் ஹிமாலய பர்வதத்திலிருக்கின்ற தேவியைப் பார்த்து பெருங் குரலில் சொன்னதாவது—"நீ ஸும்ப நிஸும்பருடைய சமீபத்துக்குச் செல்வாயாக. நீ தானாகவே என் யஜமானனுடைய சமீபத்துக்குப் போகாத பக்ஷம் நான் உன் கேசத்தைப் பிடித்து இழுத்து அவமானப் படுத்திக் கொண்டு போய் விடுவேன்"

**ஸ்ரீ தேவி சொல்லியது (8)**

அஸுரராஜாவினால் ஆக்ஞாபிக்கப்பட்டவனும், சேனையோடு கூடினவனும், பலவானும் ஆகிய நீ என்னை இவ்விடம் இழுத்துக் கொண்டு போகும் பக்ஷத்தில், அதற்கு நான் என்ன செய்வது?

**மஹரிஷி சொல்வது (9-20)**

இதைக் கேட்டதும், அந்த தூமிரலோசனன் தேவியின் நேராக வேகமாக ஓடினான். அம்பிகையோ, அவனை ஹூம் என்ற சப்தத்தால் சாம்பலாக்கி விட்டாள். இதைக் கண்டு கொண்டிருந்த அஸுரப் படையின் மீது தேவி கூரான அம்புகளையும், வேல்களையும்,வெண் மழுக்களையும் கொண்டு வர்ஷித்தாள். தேவியுடைய வாஹனமான ஸிம்ஹமும், கேஸரங்களை (பிடரீ ரோமத்தை) உயர்த்திக் கொண்டு அதி கோரமாக கர்ஜித்துக் கொண்டு அஸுரப் படையின் மீது விழுந்து, பல அஸுர சிரேஷ்டர்களை கையினால் அடித்தும், மற்ற சிலரைக் கடித்தும், வேறு சிலரை, கால் கொண்டு மிதித்தும்

கொன்று விட்டது. சிலருடைய உதரத்தை (வயிற்றை) தன் நகங்களால் கிழித்து; உள்ளங் கைகளால் அடித்து சிலருடைய சிரஸ்ஸை வேருக்கிற்று. வேறு சிலருடைய கைகளையும் தலைகளையும் முறித்தது. சேஸாத்தை தூக்கிக் கொண்டு வேறு சிலருடைய வயிற்றிலிருந்து இரத்தத்தைக் குடித்தது. வெகு சீக்கிரத்தில் தேவியின் வாஹனமான அந்த மஹாகேஸரி அதி கோபத்தோடு கூட அந்த ஸைன்யத்தைப் பூராவும் கொன்று விட்டது—அந்த தூமிரலோசனனை தேவி கொன்றதும், ஸைன்யத்தைப் பூராவும் தேவியின் வாஹனமான ஸிம்ஹம் கொன்று விட்டதும் கேள்விப்பட்ட அஸுரராஜனான ஸும்பன் உதடு துடிக்க கோபத்துடன் பரிமித்துக் கொண்டு அண்டன், முண்டன் என்ற அஸுர முக்யர்களை அழைத்துச் சொன்னதாவது, "ஹே சண்ட! ஹே முண்ட! நீங்கள் பெரிய சேனையோடு கூட அங்கே போய் அவளை வெகு வேகத்தில் கேசத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டோ, கட்டிக் கொண்டோ கொண்டு வாருங்கள். யுத்தத்தில் சந்தேஹம் ஏற்படும் பக்ஷம், அஸுரர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து எல்லா ஆயுதங்களையும் பிரயோகித்து அவளைக் கொல்லவும் செய்யுங்கள். அந்த துஷ்டையை கொன்று விட்டு சிம்பத்தைக் கொன்று கீழே எறிந்து விட்டு வெகு வேகத்தில் திரும்பி வந்து விடுங்கள். அல்லது அந்த அம்பிகையைப் பிடித்துக் கட்டிக் கொண்டு வாருங்கள்" என்று ஸ்ரீ மார்க்கண்டேய புராணத்தில் தேவீ மஹாத்மியத்தில் (6) தூமிரலோசன வதம் என்ற எண்பத்தி மூன்றும் அத்தியாயம்.

## ஏழாவது அத்தியாயம்.

மஹரிஷி சொல்லியது (1-24)

அவன் உத்தரவு பிரகாரம் அனுப்பப்பட்ட சண்ட முண்டா ஸுரர்கள் சதுரங்கப் படையோடு கூட ஆயுத ஸ்ஹிதராகப் புறப்பட்டார்கள். ஸ்வர்ணமயமான அந்த பெரிய மலைச் சிகரத்தின் மேல் சிங்கத்தின் மீதிருந்து மந்தஹாஸம் செய்து கொண்டிருக்கின்ற தேவியை அவர்கள் கண்டார்கள்—தேவியைப் பார்த்ததும் உடனே அவளை ஓடிப் போய் பிடிக்க அவர்கள் தயாரானார்கள். சிலர் நாணேற்றின வில்லோடும், வாளோடும் தேவியின் சமீபத்துக்குச் சென்றனர். அப்பொழுது அம்பிகை அந்த சத்ருக்களிடம் தேவிக்கு அதிக கோபம் உண்டாயிற்று. கோபத்தினால் தேவியினுடைய முகம் கருப்பு நிறமாயிற்று. உடனே வளைந்த புருவத்தோடு கூடின தேவியின் நெற்றியிலிருந்து கராளவதனையான காளி வாளும் கயிறும் கையில் தரித்துக் கொண்டு வெளியேறினள். விசித்திரமான கட்வாங்கத்தைத் தரித்து, முண்டமாலையை அணிந்து, புலித் தோல் உடுத்து, தேஹத்தில் மாம்சமேயில்லாமல் அதிகோரமாக யிருக்கின்ற அந்த காளி, பெரியதாக வாயைப் பிளந்து கொண்டும், நாக்கை வெளியில் விட்டு நீட்டிக் கொண்டும், கண்கள் குழிக்குள்ளிருக்கும்படிக்கும், அஷ்டதிக்குகளை தன் தொனியால் அட்டஹாஸஞ் செய்துகொண்டும், அந்த தைத்யப் படையின் மீது குதித்துச் சென்றாள். அஸுரர்களை அடித்துக் கீழே தள்ளிக் கொண்டே அந்த சைன்யத்திற்கு தீங்கைச் செய்தாள். யானைகளைப் பாகன்களோடும், அங்குசதாரிகளோடும், சைன்யத்தோடும், மணிகளோடும், தன் ஒரு கை கொண்டு அடித்துத் தன் வாய்க்குள் தள்ளி விட்டாள். அப்படியே குதிரையோடு கூட குதிரைப் படையையும், ஸூதனோடு கூட தேர் படையையும் தன் வாய்க்குள் தள்ளி பற்களால் அதி பயங்கரமாக கடித்துத் தின்றாள். ஒருவனுடைய தலையையும், மற்றொருவ

னுடைய கழுத்தையும் பிடித்தாள். வேறொருவனைக் கால் கொண்டு மிதித்தும், வேறொருவனை நெஞ்சினுல் அடித்தும் தொலைத்தாள். அந்த அஸுரர்கள் விட்ட ஆயுதங்களையும் மஹா அஸ்திரங்களையும் எல்லாம் வாயினுல் பிடித்து கோபத்தோடு கூட கடித்துத் தொலைத்துவிட்டாள். பலிஷ்டர்களான துஷ்ட தைத்யருடைய அந்த சைன்யத்தை எல்லாம் மர்த்தித்தாள். மற்ற சிலரை பிரஹரித்தாள். சில அஸுரர்கள் யுத்தத்தில் வாளால் வெட்டுண்டும் சிலர் கட்வாங்கத்தால் அடிபட்டும் சிலர் பற்களால் கடிபட்டும் இறந்தார்கள்.

வெகு சீக்கிரமாக தன்னுடைய பெரிய சைன்யத்தைப் பூராவும் தேவி கொன்று விட்டதைப் பார்த்த சண்டாஸுரன் அதிகோரமான காளி இருக்கும் இடத்தை நோக்கி வேகமாக ஓடினுன். பீமாக்ஷியான அந்த காளியை சண்ட மஹாஸுரன் அதிகோரமான சரவர்ஷங்களாலும் அனேக சக்ரங்களைக் கொண்டும் மூடி விட்டான். அந்த பல சக்ரங்கள் தேவியின் வதனத்திற்குள் சென்று விட்டன. உடனே காளிகா தேவி அதிக கோபத்தோடு கூட தன் பெரிய வாய்க் குள்ளிருக்கும் பற்கள் பிரகாசிக்கும்படி ஒரு பயங்கரமான சப்தத்தோடு சிரித்தாள். பிறகு மஹா ஸிம்மத்தின் மீது ஏறி சண்டனைப் பார்த்துச் சென்றாள். அவனுடைய கேசங்களைப் பிடித்துக் கொண்டு தன் வாளினுல் அவனுடைய கழுத்தை வெட்டினுள். தலை வெட்டுண்ட உடன் தைத்யன் அதிகோரமான ஒரு பெரிய சப்தத்தை உண்டாக்கினுன். அந்த சப்தம் மூன்று உலகங்களையும் நடுங்கச் செய்தது. சண்டனை தேவி கொன்றதைப் பார்த்த முண்டன் காளிகைக்கு நேராக ஓடினுன். அவனை காளி வெகு கோபத்தோடு கூட தன் கட்வாங்கத்தைக் கொண்டு அடித்துத் தரையில் தள்ளினுள். அதி வீரிய சாலிகளான சண்டமுண்டர்களை தேவி கொன்று விட்டதைப் பார்த்த அவர்களுடைய மீதி சைன்யம் பயந்து நாலா பக்கங்களிலும் வேகமாக ஓடின. சண்ட முண்டாசுரர்களுடைய தலைகளை கையில் எடுத்துக் கொண்டு தேவி அட்டஹாஸம் செய்து கொண்டு சண்டிகையிடம் சென்று சொன்னதாவது. "இதோ யுத்த யக்ஞத்தில் மஹா பசுக்களான சண்டமுண்டர்களைத் தங்களுக்கு முன் கொண்டு வந்து வைத்திருக்கின்றேன். ஸும்ப நிஸும்பர்களைக் கொல்ல வேண்டிய பாரம் தாங்களே எடுத்துக் கொள்ள வேண்டும்."

மஹரிஷி சொன்னதாவது (25)

சண்டமுண்டர்களான மஹா தைத்யர்களைக் கொன்று தேவி வந்ததைப் பார்த்த சண்டிகை, மிகக் கனிவாக காளியோடு சொன்னதாவது.

தேவீ சொல்வது (26)

சண்டனையும், முண்டனையும் கொண்டு வந்ததனுல் நீ லோகத்தில் சாமுண்டா தேவி என்ற பிரசித்த நாமமுள்ளவளாக நீ யிருப்பாய்."

என்று ஸ்ரீ மார்க்கண்டேய புராணத்தில் தேவி மஹாத்மியத்தில் (7) சண்டமுண்ட வதம் என்ற எண்பத்து நான்காவது அத்தியாயம்.

## எட்டாவது அத்தியாயம்.

மஹரிஷி சொல்வது (1—54)

சண்டன், முண்டன் இவர்கள் கொல்லப் பட்டதையும், சைன்யத்தின் பெரும் பாகம் நாச மடைந்ததையும் அறிந்த அஸுர ராஜாவான ஸும்பன்

கோபத்தால் மதிமயங்கி, தைத்ய ஸைன்யங்களைப் பூராவும் ஒன்று சேர்த்துத் தயாரிக்க உத்தரவு கொடுத்தான். "இப்பொழுது எண்பத்தாறு தைத்யர்கள் எல்லா ஸைன்யத்தோடும், எல்லா ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு புறப்படட்டும். எண்பத்தி நான்கு கம்புக்களும், தங்களுடைய ஸைன்யத்தோடு கூட புறப்படட்டும். கோடி வீர்யர்கள் என்ற பிரிவினருடைய ஐம்பது வர்க்கமும், தூமிரருடைய நூறு வர்க்கமும் என் உத்தரவுப் பிரகாரம் புறப்படட்டும். காலகர், தௌர்ஹிருதர், மௌரியர், காலகேயர் என்ற அஸுரர்களும் என் உத்தரவுப்படி யுத்தத்திற்கு தயாராக சீக்கிரம் புறப்படட்டும்.' இப்படி உத்தரவு கொடுத்து விட்டு உக்கிர சாஸனனை ஸும்பாஸுரேந்திரன் அனேகாயிரம் பெரும் படைகள் சூழப்புறப்பட்டான். இந்த அதி பயங்கரமான ஸைன்யம் வருவதைப் பார்த்து சண்டிகா தேவி, நாண் சப்தத்தினால் பூமி, ஆகாயம், பாதாளம் ஆகிய இவைகளை நிறைத்தாள். ஹே ராஜாவே! அந்த சிங்கமும் அதிக கம்பீரமாக கர்ஜித்தது. அந்த சப்தத்தை தேவி, மணியினுடைய நாதத்தினால் அதிகப்படுத்தினாள். வில் நாணினுடையவும், மணி யோசையினுடையவும் திக்கு நிறைந்த சப்தத்தை வாய் பிளந்து கொண்டிருக்கின்ற காளிகாதேவி பயங்கர நாதங்களால் ஜயித்தாள். இந்த சப்தத்தைக் கேட்ட அஸுரப்படை தேவியையும், ஸிம்ஹத்தையும் காளியையும் அம்புகளைப் பிரயோகித்துக் கொண்டே நாற்புறமும் வளைத்தது. ஹே, ராஜாவே! அப்பொழுது, அஸுர நாசத்திற்காகவும், தேவர்களின் க்ஷேமத்திற்காகவும், அதிக வீரிய பலமுள்ள சக்திகளை, பிரம்மா, விஷ்ணு, மஹேசுவரன், இந்திரன் இவர்களின் சரீரங்களிலிருந்து தங்கள் தங்கள் வடிவங்களோடுகூட சண்டிகாதேவியை அடைந்தன. ஒவ்வொரு தேவனுடைய சக்தியும் அந்தந்த தேவனுடைய ஸ்வரூபத்தோடும், ஆபரணங்களோடும், வாஹனங்களோடும் கூடவே அஸுரர்களை எதிர்த்து யுத்தம் செய்யவந்தன.

பிரம்மாவினுடைய சக்தி ஜபமாலையும், கமண்டுவும் தரித்தவளாக ஹம்ஸ வாஹனத்தின் மீது ஏறிக் கொண்டு வந்தாள். இவளே பிரம்மாணியாவள். மஹேசுவரனுடைய சக்தியான மஹேசுவரி சிரேஷ்டமான திரிசூலமும், பெரிய நாகங்களாகிற வளைகளும் அணிந்தவளாக விருஷப வாஹனத்தின் மீது ஏறிக் கொண்டு வந்தாள். இவள் சிரசில் சந்திர கலையை அணிந்திருந்தாள். குமாரனுடைய சக்தியான கௌமாரி கையில் வேலாயுதத்தை தரித்துக் கொண்டு சிரேஷ்டமான ஆண்மயில் மீது ஏறிக் கொண்டு அஸுரர்களோடு போர் புரிய வந்து சேர்ந்தாள். வைஷ்ணவ சக்தி சங்கு, சக்ரம், கதை, சாரங்கம், கட்கம் ஆகிய பஞ்சாயுதங்களோடு கூட கருடவாஹனத்தின் மீது ஏறிக் கொண்டு வந்து சேர்ந்தாள். விஷ்ணுவினுடைய நிஸ்துல்யமான வராஹ ரூபம் தரித்த சக்தி வாராஹ ஆகிருதியோடு அவ்விடத்துக்கு வந்தாள். நாரஸிம்ஹியான சக்தி நரஸிம்ஹஸமான ரூபத்தோடு பிடரி ரோமத்தை ஆட்டிக் கொண்டு நக்ஷத்திர மண்டலத்தைப் பிளப்பது போல வந்தாள். இந்திரனுடைய சக்தி இந்திரனைப் போல ஒரு ஆயிரம் கண்களோடும், கையில் வஜ்ராயுதத்தோடும், ஐராவதத்தின் மீது வந்து சேர்ந்தாள். அந்த நவசக்திகளால் பரிவிருதனான மஹேசுவரன் "என்னுடைய பிரீதியினால் அஸுரர்களை சீக்கிரத்தில் கொன்று விடு" என்று சண்டிகையோடு சொன்னான். உடனே தேவியின் சரீரத்திலிருந்து அதி கோரையாய் அதி உக்ரையாய், அனேக நரிகளுடைய சப்தத்தோடு கூட சண்டிகா சக்தியும் வந்தாள்.

அபராஜிதையான அந்த சக்தி சிவந்த ஜடையையுடைய மஹேசுவரனைப் பார்த்து சொன்னதாவது, "பகவானே! இங்கேயிருந்து ஸும்ப நிஸும்பா ஸுரர்களிடம் தூதனாகச் செல்லவும். பிறகு அதி கர்விதரான ஸும்ப நிஸும்பர்களோடும் யுத்தத்திற்கு தயாராகயிருக்கும் அஸுரர்களோடும் இப்படிச் சொல்ல வேண்டும்: "திரைலோக்யமும் இந்திரன் வசமாகட்டும்; ஹவிஸ்ஸு தேவர்களைச் சேரட்டும்; நீங்களெல்லாம் உயிரோடு இருக்க வேண்டுமென்றால் பாதாளத்துக்கு சென்று விடுங்கள்; அல்லது பல கர்வமுடையவர்களாக யுத்தம் செய்வதானால் வாருங்கள்; உங்களுடைய மாமிசத்தைத் தின்று என்னுடைய நரிகள் திருப்தியடையட்டும்" சிவனை தானாகவே தூதுக்கு அனுப்பினாள். ஆகையால் இந்த லோகத்தில் தேவியை சிவதூதி என்று சொல்லுகிறார்கள். தேவியினுடைய வாக்கியம் சிவனால் சொல்லப்பட்டதைக் கேட்ட அஸுர முக்கியர்கள் அதிக கோபத்தோடு காத்யாயனியின் சமீபத்திற்கு வந்தார்கள். பின்பு கோபிஷ்டர்களான அஸுரர்கள் தேவியின் மீது அம்புகளையும், வேல்களையும், சுரிகைகளையும் வர்ஷித்தார்கள். அவர்கள் அனுப்பின அம்புகள், வேல்கள், சூலங்கள், வெண்மழுக்கள், இவைகளை தேவி, நாண் கட்டித் தயாரா யிருக்கும் வில்லிலிருந்து புறப்பட்ட மஹாசரங்களைக் கொண்டு ஒரு வேடிக்கை போல் முறித்தாள். அப்படியே காளியும் தேவியின் முன்பில் சத்துருக்களை சூலம் கொண்டு குத்தியும், கட்வாங்கத்தால் பிளந்தும், சஞ்சாரம் செய்து கொண்டிருந்தாள். பிரம்மாணி தன் கையிலுள்ள கிண்டி ஜலத்தை அவர்கள் மீது தெளித்து அவர்களை வீரியமில்லாதவர்களாகவும் தேஜஸ் இல்லாதவர்களாகவும் செய்தாள். மஹேசுவரி திரிசூலம் என்ற ஆயுதத்தாலும், வைஷ்ணவீ சக்கரத்தாலும், கௌமாரி வேலாயுதத்தாலும் அதிக கோபத்தோடு அசுரர்களைக் கொன்றார்கள். ஐந்திரி வஜ்ராயுதத்தால் அனேக நூறு தானவர்களை மடித்தாள். வாராஹியினுடைய முகதாடனத்தால் அடிபட்டும், கோரப்பல்லினால் நெஞ்சு பிளக்கப்பட்டும், சக்கரம்பட்டு பிளக்கப்பட்டும் பலர் தரையில் விழுந்து மடிந்தனர். நாரசிம்ஹி சிம்மநாதம் செய்துகொண்டு, திக்கெல்லாம் முழக்கினாள். சில அஸுர முக்கியரை நகங்களால் கீறியும் மற்ற சிலரை ஆகாரமாகச் செய்துகொண்டும் யுத்தரங்கத்தில் சஞ்சரித்தாள். சிவ தூதியின் அட்டஹாஸம் கேட்டு பலர் பூமியில் விழுந்தனர்; அவர்களை அவள் உடனே கடித்துத் தின்றாள். இப்படி மாதாக்கள் கோபித்து பலவித உபாயங்களால் அஸுர முக்கியர்களை நசுக்கிக் கொல்லுவதைக் கண்ட அஸுரசேனை ஓட ஆரம்பித்தது. மாதாக்களால் நன்றாக மர்த்தனம் செய்யப்பட்ட அஸுரர்கள் பயந்து ஓடுவதைப் பார்த்த ரக்தபீஜாஸுரன் கோபத்தோடுகூட யுத்தத்திற்குத் தயாரானான். இவனுடைய சரீரத்திலிருந்து ஒரு துளி ரத்தம் பூமியில் விழுந்தால் அதிலிருந்து அந்த ராக்ஷஸனைப்போல ஒரு அஸுரன் உண்டாய் விடுவான். அவன் கதாயுதத்தை கையிலேந்தி இந்திரசக்தியுடன் யுத்தத்திற்கு வந்தான். இந்திராணி தன் வஜ்ரத்தால் அவனை அடித்தாள். வஜ்ராயுதத்தால் அடிக்கப்பட்ட அவனுடைய சரீரத்திலிருந்து அதிகமான ரத்தம் பிரவஹித்தது. அதிலிருந்து அவனுடைய ஆகிருதியோடு கூடவும், அவனைப்போல பராக்கிரமசாலியாகவும் உள்ள அனேக சேனையாட்கள் உண்டாயினர். அவனுடைய சரீரத்திலிருந்து எவ்வளவு ரத்தத் துளிகள் பூமியில் விழுந்தனவோ அவ்வளவு படைவீரர்கள் அவனைப்போலொத்த பராக்கிரமமுள்ளவர்களாகவும், பல முள்ளவர்களாகவும் வெளியே காணப்பட்டார்

கள். ரத்தத்திலிருந்து உண்டான அந்த படையாளர்களும் அவ் விடத்தில் மாதாக்களோடு சஸ்திரவர்ஷத்தால் அதிகோரமாகவும் அதி உக்கிரமாகவும் யுத்தம் செய்தார்கள். பிறகு அவன் தலை வஜ்ராயுதத்தா லடிபட்டு உடைந்து ரத்தம் வந்தது. அதிலிருந்தும் அனேக ஆயிரம் படைவீரர்கள் உண்டானார்கள். வைஷ்ணவி அவனை சக்ராயுதத்தா லடித்தாள். ஐந்திரி கதாயுதத்தால் அடித்தாள். வைஷ்ணவியின் சக்கரத்தால் அடிபட்டு வெளியே வந்த ரதத்திலிருந்தும் அனேக ஆயிரம் அஸுரர்கள் உண்டாகி லோகத்தை நிறைத்தார்கள். கௌமாரி வேலாயுதத்தாலும், வாராஹி கட்கத்தாலும் மாஹேசுவரி சூலத்தினாலும், ரக்தபீஜாஸுரனை அடித்தார்கள். அந்த ரக்தபீஜ தைத்யனும், கதாயுதத்தினால் மாதாக்களை யெல்லாம் பலவிதமாக அடித்தான். வேல், சூலம் முதலான ஆயுதங்களால் அடிபட்டதனால் அவன் சரீரத்திலிருந்து ரத்தம் வந்தது. அதிலிருந்து அனேக அஸுரர்கள் உண்டானார்கள். அஸுரனுடைய ரத்தத்திலிருந்து உண்டான அஸுரர்களால் லோகம் பூராவும் நிறையப்பட்டது. அப்பொழுது தேவர்கள் அதிகமான பயமடைந்தார்கள். தேவர்களுடைய துக்கத்தைப் பார்த்த சண்டிகை காளிகா தேவியோடு சொன்னாள். 'ஹே சாமுண்டே! நீ உன் வாயை திறந்துகொண்டு நில்லு. ரக்தபீஜாஸுரன் மீது நான் பிரயோகிக்கும் அஸ்திரங்களால் வெளியேறும் ரத்தத்துளிகளை உன் வாயிலாக்கிக்கொள். அப்படி அவனிடமிருந்து உண்டாகும் அஸுரக் கூட்டத்தை நீ தின்றுகொண்டு யுத்த பூமியிலிரு. அப்பொழுது இந்த அஸுரன் ரத்தமேயில்லாமல் இறந்து போய்விடுவான். நீ இவ்வா றுழன்று கொண்டிருந்தால் மற்ற அஸுரர்களும் மறுபடியும் உண்டாக மாட்டார்கள்."

(55-61)

இப்படி காளிகாதேவியோடு சொல்லிவிட்டு தேவி அவனைச் சூலத்தால் குத்தினாள். காளியும் ரக்தபீஜாஸுரனுடைய ரத்தத்தை தன் வாயில் விழும்படிச் செய்தாள். உடனே அவனும் சண்டிகையை கதாயுதத்தால் அடித்தான். ஆனால் அவனால் தேவிக்கு கொஞ்சமும் வேதனை யுண்டாகவில்லை. தேவியினால் அடிக்கப்பட்ட அவனுடைய சரீரத்திலிருந்து தாரானமாக பிரவஹித்த ரத்தம் பூராவும் சாமுண்டி தன்னுடைய வாயினால் கிரஹித்துக்கொண்டாள். ரத்த பதனத்தாலுண்டான அஸுரர்களை சாமுண்டி தன் வாயிலுள்ள பற்களால் கடித்து தின்று அவர்களின ரத்தத்தையும் குடித்தாள், சாமுண்டியால் ரத்தம் குடிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்ற ரக்தபீஜன்மீது, தேவி சூலமும், சக்கரமும், பாணங்களும் அனுப்பிக் கொண்டிருந்தாள். ராஜாவே! அப்படி ஆயுத ஜாலங்களேற்று, ரத்தமில்லாமல் ஆகி, ரக்தபீஜன் கீழே பூமியில் விழுந்தான். அப்பொழுது தேவர்கள் அதிக சந்தோஷ மடைந்தனர். அஸுரர்களுடைய ரத்தம் குடித்து மதம்பிடித்த மாதாக்கள் லஹரியோடுகூட நர்த்தனம் செய்தனர் என்று மார்க்கண்டேய புராணத்தில் தேவிமஹாத்மியத்தில் (8) ரக்தபீஜ வதம் என்ற எண்பத்தைந்தாவது அத்தியாயம்.

---

# தமிழரும் இலக்கிய வளர்ச்சியும்

("சமூகத்தொண்டன்.")

ஒரு நாட்டின் பண்டைக்காலச் சிறப்பைக் காட்டும் ஓவியமாயும், எதிர்கால ஏற்றத்திற் கோர் ஏணியாயும் மிளிர்வது அந்நாட்டின் இலக்கியங்களே. இலக்கியமென்பது ஒரு நாட்டில் அவ்வப்போது தோன்றும் மக்களில் சிலர் உழவு, வாணிபம், மருத்துவம், சிற்பம், ஓவியம், இசை, விஞ்ஞானம், அரசியல், இலக்கியம் ஆகிய இவைகளில் ஒவ்வொன்றில் புலமை மிக்கோராய், தத்தம் அறிவும் ஆராய்ச்சியும், அனுபவமும் எட்டிய நிலையில் தாம் தாம் கண்ட நுணுக்கத்தை, நுட்பத்தை, பெற்ற அனுபவத்தை வரிவடிவில் ஏற்றி, மிக மிகக் கருத்துடனும், அருமையுடனும் நூல்வடிவாக்கி, மக்கள் உய்யவேண்டியே வைத்துள்ள பெருஞ் செல்வமாகும். ஆகவேதான் இத்தகைய அருஞ் செல்வத்தை எந்நாட்டினரும் ஏற்ற முறையில் போற்றி வருகின்றனர். எந்நாட்டினராயினும் சரி அவர்கள் தம் நாட்டின் இலக்கியச் சிறப்பை அறியாதிருப்பின் அந்நாடும், அதன் வாழ்க்கை முறையும், அங்குள்ள மக்களின் குறிக்கோளும் அழிந்து பட்டு, முடிவில் விலங்கு நீர்மையே தலைப்பட்டு நிற்கும்.

ஆகவே இலக்கியமில்லா நாடு எதுவாயினும் சரி அது உயிரில்லாத உடலையே ஒக்குமென்று யான் எடுத்துரைக்க வேண்டியதில்லை. இன்று செல்வ வகையிலும், மற்றெல்லாச் சிறப்புகளிலும் தலைசிறந்து நிற்கும் நாடுகளெல்லாம், இந்நிலை யெய்தியதற்குக் காரணமாய் நிற்பது அந்நாட்டின் இலக்கியங்களே. ஐரோப்பா கண்டத்தில் அயர்லாந்து போன்ற சிறு தேசங்களெல்லாம் இன்று தமது தாய்மொழி வளர்ச்சியில் நாட்டமனைத்தையும் செலுத்தி வருவதும், அவை தம் அன்னை மொழிகளையே அரசியல் மொழிகளாக மாற்றி விட்டதும் தத்தம் இலக்கிய வளர்ச்சி கருதியே யாம். ஏன்? ஜப்பானை எடுத்துக்கொள்வோம். அது சென்ற நூற்றாண்டுகட்கு முன்னர் இருந்தவிடம் தெரியா திருந்தது. ஆனால், இன்று அது சுதந்தரப் பேரரசியாய், தனியரசு புரியும் பல வல்லரசுகளுடனும் தோளோடு தோள்தட்டி, ஓர் ஒப்புயர் வில்லாப் பேரரசு ஒன்றை நிறுவப் பார்க்கின்றது. அது இந்நிலை யெய்தியதற்குக் காரணம் என்னையெனின், இலக்கியமும் கலைகளும் வளர்க்கத் தொடங்கியதே யாகும் என்க. சென்னை மாகாணக் கல்லூரியல் தமிழாசிரியராயிருந்த திருவாளர், கா. நமச்சிவாய முதலியார் அவர்கள் சில வாண்டுகட்கு முன்னர் பெங்களூரில் தலைமை வகித்து நிகழ்த்திய சொற்பொழிவு ஒன்றில், "ஜப்பானியப் படித்த மக்களில் பலரும் பிறநாட்டுக் கலைகளிலுள்ள பயன்றருவன வனைத்தையும், தங்கள் மொழியில் மொழி பெயர்ப்பதென்பது ஒரு கடமையாகக் கொள்ளப்பட்டு வருவதால், ஜப்பான் இன்று வாழ்க்கைப் பிரயாணத்தின் முன்னணியில் செல்கின்றது. ஆனால் நமது சென்னை மாகாணத்தில் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டு ஐம்பத்துஐந்து ஆண்டுகள் ஆகின்றன. ஆண்டுதோறும் ஆயிரம் மாணவர்க ளாயினும் குறைந்த பட்சம் பட்டம் பெற்று வெளி வருகின்றனர். இதுகாறும் ஒவ்வொருவரும் ஒரு நூல் வீதம் நமது தமிழ்

மொழியில் மொழிபெயர்த் திருப்பினும் ஆண்டுதோறும் ஆயிரம் நூல்களும், இற்றைக்குச் சுமார் ஐம்பதினாயிரம் நூல்களும் பிறமொழிகளினின்றும் நமது மொழிக்கு வந்திருக்கும்'' என்று உள்ளம் உருகும் வகையில் எடுத்துரைத் தார்கள். என்னே ஜப்பானியருக்கு மொழிப்பெருக்கத்திலுள்ளமோகம்!

நமது இலக்கியத்தைச் சிறிது ஆராய்வோம். புராணங்களில் தமிழைப் பற்றிச் சொல்லுவதை மக்களிற் பலர் மறுக்கலாம். ஆனால் முச்சங்கங்கள் இருந்ததையும், அவற்றின் முதற்சங்ககாலம் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தென்பதையும் யாரும் எளிதில் மறுக்க முடியாது. எனவே தமிழர் நாகரீகம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சிறந்திருக்கிறது. தமிழர் நாகரீகத்தைச் சார்ந்து நின்ற தமிழ் இலக்கியத்தின் பழமையும், பாங்கும் வியப்பை யளிப்பதா யுள்ளன. ஆனால் தமிழிலக்கியத்தின் பழமை இவ் வளவே என்று மாத்திரம் சொல்லி விடுவதற்கில்லை. சித்தவைத்திய முறை தமிழகத்தில் பிறந்து தமிழர்களாலேயே வளர்க்கப்பட்டு வந்திருப்பதாய் அறி ஞர் கருதுவதை யாராயினும் மறுக்கின்றனரோ? இச் சித்த மருத்துவ முறை பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே யிருந்து வந்ததாக அறி ஞர்கள் ஒருபுறம் சொல்லும்போது சிலவாண்டுகட்கு முன்னர் டாக்டர். முத்து என்பார் ஈழத்தில் நிகழ்த்திய சொற்பொழி வொன்றில் "இருபத் தேழாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சித்த மருத்துவமுறை இருந்த"தாகக் கூறினார். சித்த மருத்துவத்தைப்பற்றி டாக்டர். முத்து அவர்கள் குறிப் பிடும் காலத்தை யொப்புவதாயின், தமிழ் இலக்கியமும் அப்போது இருந்த தாக ஒப்ப வேண்டியதுதான்.

தமிழ் இலக்கியத்தின் சிறப்பு இன்றும் ஒளி குறையாது நின்று நிலவு கின்றது. தமிழ்நிலத்தில் மணிமுடி தாங்கிய மன்னர் மன்னர்கள் எல்லாம் ஆட்சி செய்த காலத்தும் தமிழிலக்கியம் தன்சுவை குன்றாது சுவைத்திருந்த தென்பதை அவர்கள் ஆட்சிமுறை அளந்து காட்டவில்லையோ? மூவேந்தர் முடிதாங்கிய காலை அரசியல் தத்துவங்களிலும், ஆட்சிமுறையிலும் குறை பாடின்றி யிருக்கவில்லையோ? இவ்வளவுக்கும் ஆதாரவா யிருந்தது தமிழிலக் கிய மென்று யான் எடுத்துக் காட்டவேண்டியதில்லை.

ஆனால் இன்று நமது இலக்கியத்தின் நிலை யென்ன? அது சக்களத்தி பிள்ளையாகவே கருதப்படுகிறது. ஒரு புறத்தில் அடிமைமொழி யெனப்படுகின் றது. மற்றொருபால் சூத்திரமொழி யென்று அலக்கழிக்கப்படுகின்றது. இத் தகுதியற்ற எதிர்ப்புக்களுக் கிடையில் தன்னம்பிக்கை யிழந்த தமிழர்கள் செய்வதொன்றும் அறியாராய், எடுப்பார் கைப்பிள்ளைகளாய்க் கிடக்கின்றனர். இவர்கட்கு இறந்தகால நினைவுமின்றி, எதிர்கால வாழ்க்கைக்கு வகுக்க வேண் டிய திட்டங்களுமின்றி அன்றைய உணவிற்கு அலைந்து திரியும் பறவை, விலங்கினை யொத்துளார்.

இந் நிலையிலுள்ள நமக்கும் நமது வருங்கால தலைமுறையினருக்கும் ஜப்பானியருக்குள்ள உணர்ச்சி கால் கொள்ளுவதெங்ஙனம்? நமது மாணவர் கட்குத் தாய்மொழி யுணர்ச்சி யென்பதே சிறிதும் இல்லையாதலால், கல்லூரிக் கட்டிடத்தில் கால் வைத்ததுமே உலகையே அடியுடன் மறந்து விடுகின்ற னர். உடனே தங்களுக்கென ஓர் தனியுலகைப் படைத்துக் கொள்கின்ற னர். அவ்வுலகில் அவர்கள் உடை வேறு, நடை வேறு, எண்ணங்கள் வேறு, வாழ்க்கைமுறை வேறு, குறிக்கோள் வேறு, யாவும் வேறே. இவை யாவும்

மக்கள் சமூகத்தையே அழித்து விடவல்ல பேய்த்தன்மை வாய்ந்தனவாய் உள்ளன. உருப்போட்டு ஒப்பித்த பாடம் தவிர்த்து வேறு பிழைக்க வழியறியாத அவர்கள், பட்டம் பெற்று வெளிவந்ததும் வேலைதேடி அலைந்து, அலைந்து, கண்ணும் கருத்தும் இளைத்தவர்களாய் முடிவில் ஓர் வேலைபெற்று காலை முதல் காரிருள் வருமட்டும் உழைத்து நாள் கழிக்க வேண்டியவர்களாகின்றனர். இதுவே அவர்கட்கு வான்வாழ்க்கையாய்த் தோன்றுவதால் தங்கள் நாட்டைப்பற்றியோ, மக்களைப்பற்றியோ, தங்கள் சுதந்தரவாழ்வைப் பற்றியோ யாதொன்றும் தோன்ற இடமில்லை. இப்படியே இவர்களை விட்டு விடின் இன்னும் கொஞ்சகாலத்தில் நமது நாட்டின் கதி என்னவாகு மென்பதை எண்ணுவதற்கும் நெஞ்சம் திடுக்கிடுகிறது.

இவர்களை மேற்கூறிய ஆபத்தான வழியினின்று திருப்ப முயலவேண்டும். இதற்கு நமது இலக்கியத்தின் மூலமாய்த்தான் வழி செய்யவேண்டும். நமது இலக்கியத்தை தினசரி வாழ்க்கையில் போற்றவேண்டும். பட்டினங்கள் தோறும் ஊர்கள்தோறும், வீதிகள் தோறும், இல்லங்கள் தோறும் இலக்கியப் பயிற்சி வளர்தல் வேண்டும். இப்படிச் செய்வதன் மூலம் ஒவ்வொரு தமிழ் மகனும், தமிழ்மங்கையும் நமது பழந்தமிழர் கல்வி, ஒழுக்கம், வாழ்க்கை முறை, குறிக்கோள் ஆகியவற்றை அறிந்து கொள்வதோடு, அக்காலத்துத் தமிழ் அரசர்களும், அவர்களின் வீரமும், ஆட்சிமுறையும், பழியஞ்சிய பண்பும், அவர்கள் கலைவளர்த்த நேர்மையும், கற்றோர்பால் மதிப்பும், குடிகள்பால் குன்றா அன்பும், கடவுள்பால் இடையறா அன்பும் மற்றும் பிறவும் அறியப்படல் வேண்டும். அன்றியும் அப்போதிருந்த பெரும் புலவர்களும், அவர்கள் கல்வித்திறனும், ஒழுக்கத்தின் சிறப்பும், இலக்கிய வளர்ச்சிக்கு அவர்கள் எடுத்துக்கொண்ட உழைப்பும், அவர்கள் ஆக்கிய நூல்களும், அவற்றின் ஆழ்ந்த உட்கருத்துக்களும் ஏனையவும் அறியப்படல் வேண்டும். தலை சிறந்த வீரர்களைப்பற்றியும், அவர்கள் தீரம் பற்றியும், தியாகம் பற்றியும் தெரிவதும் இன்றியமையாமை. அக்கால மங்கை நல்லாரையும், அவர்கள் கலைப்பயிற்சியையும், ஒழுக்கத்தின் உறுதியையும், கற்பின் திண்மையையும், ஆதைக் காக்க உயிர்த்தியாகம் செய்த ஒப்புயர்வில்லா மாண்பினையும் ஆக பிறவெல்லாப் பழந்தமிழர் செய்திகளையும் அறிந்து கொள்வது எளிதாகும். இதுவே இப்போதைய எல்லாத் தமிழ்மக்களின் கடமையு மாகும்.

மேற் கூறப்பட்டவையும், இவை போன்ற மற்றனைத்தும் எல்லாருக்கும் தெரிய வேண்டுமாயின் தமிழ்த்திருமறையாகிய திருக்குறள், கம்பராமாயணம் முதல் ஆத்திச்சூடி உள்ளிட்ட எல்லாத் தமிழ்நூல்களும் வீதிக்கு வரவேண்டும். தமிழ்ப்புலவர் பெருமக்கள் இவைகளை யெல்லா மக்களுக்கும் விளங்கும் வண்ணம் எடுத்துக் கூறுதல்வேண்டும். தமிழகத்தில் இப்படி யொரு சந்தர்ப்பம் வாய்க்க வேண்டுமென்று கருதிய கவிவேந்தர் பாரதியார், "சேம முற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்" என்று அழுத்தமாகக் கட்டளை யிடுகின்றார். இப்போது தமிழகத்தில் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடத் தொடங்கியுள்ளது கலை வளர்ச்சிக்கு ஓர் நல்ல சகுனம். இது போன்று கம்பர் முதல் மற்றெல்லாப் புலவர் பெருமக்களின் திருநாட்களும் கொண்டாடுங் காலம் அதிதூரத்தில் இல்லை. அண்மையிலேதான். இங்ஙனம் ஆண்டுதோறும் பெரும்புலவர்களின் திருநாள் கொண்டாடுவதோடு, அவர்களால் ஆக்கப்பட்டுள்ள அரும்பெருங் காவியங்

களும், உரைநடை நூல்களும் ஒவ்வோர் ஊரிலும் மக்களுக்கு பிரசங்க வாயிலாக எடுத்துச் சொல்லப்பட்டு வருவது பெரும் பயனை அளிக்கும்.

உலக முழுதுமுள்ள அரசியல்வாதிகளும், சீர்திருத்தக்காரர்களும் தங்கள் கொள்கைகளைப் பெருமக்களிடைப் பரப்புவதற்குச் சொற்பொழிவைச் சிறந்த கருவியாகப் பயன்படுத்துகின்ற செய்தி எவரும் அறிந்ததுதான். ஆகவே, நாமும், நமது தமிழகத்தில், நமது தமிழிலக்கியங்களை எல்லாம் பிரசங்கங்கள் வாயிலாக வெளியிட்டு, மக்களுக்கு இலக்கியச் சுவையை வளர்ப்பது முடியாத தன்று. சான்றாக, கம்பராமாணயத்தைப் பிரசங்கம் செய்யத் தொடங்கின் அதற்குச் செவிசாயாது கண்ணுறங்கும் தமிழ்மகனும், தமிழ் மக்களும் தமிழகத்திலேயே யிரார். ஆடவரினும், மகளிரே முன்னணியில் நின்று பெரிதும் ஆதரவளிப்பர். இதற்குப் பொருட்செலவும் பெரும்பாலும் நேராது. எங்ஙனமெனின் தமிழாசிரியரும், தமிழபிமானிகளும் முறையே பிரசங்கங்களும், பொருளுதவியும் செய்து ஆங்காங்கு நேரிடும் சிறு தேவைகளைச் சரி செய்து கொள்வர்.

எனவே, முதன்முதலாய்க் கம்பராமாயணக் காலட்சேபத்தை உடனே தமிழகமனைத்தும் தொடங்கி நடத்தி மக்கள் உள்ளத்தைக் கிளர்ந்து, கவர்ந்து கொள்ளவேண்டும். இப் பிரசங்கத்தின் மூலம் கம்பர் காலமக்கள், அவர்கள் கல்வி, ஒழுக்கம், வாழ்க்கைமுறை, கலைவளர்ச்சி, அரசியல், அக்காலத் திருந்த மூவேந்தர், குறுநிலமன்னர், பெருநிலக்கிழவர் ஆக மற்றும்பல தமிழகச் செய்திகளை மக்களறிந்துகொள்ள ஏதுவாகும். தமிழர் வாழும் சென்னையில் வடமொழி சுலோகங்களைக்கொண்டு இராமாயணம் பல விடங்களில் சொல்லப் படுகின்றது. ஆனால் ஓரிடத்திலும் கம்பன் சேர்த்துவைத்துள்ள இன்ப பொக்கிஷம் வழங்கப்படக் காணோம். என்னே தமிழர்களின் ஏமாந்ததன்மை!

அரியணையில் அமர்ந்து அரசியற்றிய தமிழன்னை இன்று அலங்கோலமாய் புலம்பும் ஒலி நமது செவிகளைப் பிளக்கின்றது. அரசியாய் வாழ்ந்த அன்னை இன்று ஆண்டிச்சியாய்த் திரிவதை நமது கண்கள் காண்கின்றன. தாய் நிலை இதுவாயின் மககள் நிலை என்னாகும்? என தன்புடைத் தமிழ்ச்சகோதரி, சகோதரர்காள்! என்னே நமது கண்மூடித்தனம்! விழிமின்! எழுமின்! அன்னையை அரியணை யேற்றுமின்! அவள் தனிச்செங்கோ லோச்சத் தவங்கிடமின்! தமிழ் மன்றத்தில் அன்னையின் தாண்டவச் சிலம்பொலி எழட்டும். இதுவே நமது வீரம், இதுவே நமது வெற்றி, இதுவே நமது பயன், இதுவே நமது இன்பம். பின்னர் தமிழ்ப்புலவன் மதிக்கப்படுவான். இன்றியமையாத பல புதுக்கலைகளும் தற்காலத்திற் கொத்த முறையில் தோன்றும். அது,

"புத்தம் புதிய—கலைகள் பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்
மெத்த வளருது மேற்கே—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை."

என்று எவனோ ஓர் வழிப்போக்கன் கூறியதற்குத் தக்க பதிலாகும்.

தாய்மொழியின் வளர்ச்சிக்குத் தமிழ்நாடு பணிசெய்யின்
போய்ஒழியும் பொல்லாத பிறநாட்டு வழக்கங்கள்,
வாய்மைமிகு புதுக்கலையின் வளங்களும் பல்வளங்களொடு
தூய்மையுற வாழ்ந்திடும் தன்சுதந்தரத்தின் கொடிபறக்க.

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,



(270-வது பக்கத் தொடர்ச்சி.)

## அதிகாரம்—3.

### பொருள் நூல் சரித்திரம்.

பொருள் நூல் சரித்திரம் என்று நாம் இங்கு சொல்வதால் முன்பு சொன்ன விஷயங்களைச் சொல்லுவதாக அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது. பொருள் நூல் சரித்திர வளர்ச்சி பல அமிசங்கள் அல்லது பாகங்களைக் கொண்டதாக இருக்கிறது. ஆதிகாலந்தொட்டு இன்றையதினம் வரையில் மனிதர்கள் எவ்வாறு நாகரிகம்பெற்று வளர்ந்தனர். அதிலிருந்து நாம் எங்ஙனம் பொருள் நூலுக்கு ஒரு சரித்திரம் ஏற்படுத்தலாம் என்று கருதவேண்டும். ஆதலின் நாம் அதை ஆராய்வோம்.

(1) ஆதிகாலத்தில் மனிதன் நாகரிகம் பெற்றிருக்கவில்லை. புதிதாக எதையும் செய்ய அவன் கருத்து கொண்டிருக்கவில்லை. இருந்தவற்றை இருந்தவாறே அவன் உபயோகம் செய்துகொண்டான். ஆடு மாடு மந்தைகளைப் பார்த்துக் கொள்வது, விவசாயம், பண்டங்களை உண்டாக்குதல் முதலான விஷயங்களில் மனிதன் சிரத்தை செலுத்தவே இல்லை. செலுத்துவதற்குப் போதிய அறிவு அவன் பெற்றிருக்கவில்லை. காட்டில் உள்ள மிருகங்களை வேட்டையாடியும் காய் கனிகளையும் தின்று அவன் காலம் கழித்தான். பயிர் பச்சைகளை அவன் வளர்த்துக் காக்க அறியவில்லை. தனிப்பட்ட முறையில் சொத்தும் வைத்துக் கொள்ளவில்லை. அடிக்கடி அவன் மற்றவர்களோடு சண்டையிட்டுக் கொண்டிருந்தான்.

(2) இரண்டாவது காலத்தில் மனிதன் மற்றவர்களோடு சேர்ந்து, ஆடு மாடு மந்தைகளை வைத்து அவற்றைப் போஷிப்பதை ஒரு தொழிலாகச் செய்து கொண்டிருந்தான். அப்படிச் செய்ய ஆரம்பித்ததும் அவனுக்கு உணவு முதலான விஷயங்களைப் பொருத்தமட்டில் வேட்டையாடுவதை பிரதானமான தொழிலாக வைத்துக் கொள்ளவேண்டி யிருக்கவில்லை. மந்தைகளை வைத்துக் கொண்டிருந்தமையால் அநேக இடங்களுக்குப் போக வேண்டியதாக இருந்தது. உழைப்பில் பிரிவு (Division of labour) இருக்கவில்லை. அடிக்கடி சண்டை சச்சரவு நேரிட்டுக் கொண்டிருந்தது.

(3) மூன்றாவது காலத்தில் அவன் உழைத்துப் பாடுபட்டு உணவை உண்டாக்கிக் கொள்ளும் ஆற்றல் விருத்தியடைந்தது. விவசாயம் முன்

னுக்கு வர ஆரம்பித்தது. விவசாயத்தைச் சரிவர செய்தற்கு அக்காலத்திய மனிதன் இடம்விட்டு இடம் போவதை நிறுத்திக்கொள்ள வேண்டியதாயிற்று. ஒரே இடத்தில் இருந்து கொண்டாலொழிய விவசாய அபிவிருத்தியை அவன் எங்ஙனம் கவனிக்கமுடியும்? விவசாயத்திற்கு நில உரிமை இருக்க ஆரம்பித்ததால், தனிப்பட்ட முறையில் சொத்துரிமை (Private ownership of Property) எனும் கருத்தை அவன் ஆதரித்தான். கொஞ்சங் கொஞ்சமாக உழைப்பில் பிரிவு ஏற்பட்டது.

(4) நான்காவது காலத்தில் மனிதன் கையினுல் சில சாமான்களைச் செய்ய முற்பட்டான் (The Handicraft Stage). விவசாயம் ஒருபுறம் அபிவிருத்தியாகிக்கொண்டே யிருந்தது.

(5) கைத்தொழில் காலம் (The Industrial Stage) இது தற்காலத்தில் முதன்மைக்கு வந்துவிட்டது. கையினுல் கஷ்டப்பட்டுச் செய்வதை ஒழித்துவிட நீராவிசக்தி (Steam Power), மின்சாரசக்தி (Electric Power) முதலானவை வந்து கைத்தொழில் அபிவிருத்தியில் ஒரு பெருத்த மாறுதலைச் செய்துவிட்டன. பெரிய பெரிய தொழிற்சாலைகளும், ஆலைகளும் பெருகிவிட்டன. முதலாளித்வம் (Capitalism) முதன்மைக்குவர ஆரம்பித்து, உலகில் பல பாகங்களில் தொழில் அபிவிருத்திக்கு ஆதாரமாக நிற்பதற்கு காரணமாகியது. மேனுடுகளில் முதலாளித்வம் வேரூன்றி நின்றது. ஆனுல் தற்பொழுது முதலாளித்துவத்திற்கு விரோதமாகச் சில பொருளாதாரக் கொள்கைகள் ஜனங்களுடைய மனதில் ஒரு கிளர்ச்சியை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றன.

முதலாளி ஆதிக்கம் முன்பு இல்லாதிருந்தால் பொருளாதார அபிவிருத்தி அபரிமிதமாக ஏற்படுவதற்கு இடம் இல்லாமல் இருந்திருக்கலாம். முதலாளி வந்தமையால் தொழில் அபிவிருத்தியில் பல நன்மைகளும் தீமைகளும் ஏற்பட்டன.

(1) யந்திரங்கள் (Machines) பல்வேறு வகையில் தொழில் விருத்திக்குச் சாதகமாக இருக்கின்றன. (2) அதனுல் உழைப்பில் பிரிவு சிறந்த வகையில் ஏற்பட்டிருக்கிறது. அது மிகவும் நுட்பமாக இருக்கிறது. (3) தொழில் விருத்தியினுல் பலவகைப்பட்ட சாமான்களும் சரக்குகளும் உண்டாக்கப்படுகின்றன. அவற்றை விற்பனைசெய்ய பல தேசங்கள் "மார்க்கெட்டு"களாகி யிருக்கின்றன. (4) அதனுல் பொருளாதார சுயாதீனம் (Economic Freedom) வியாபார வசதிகள் முதலானவை உண்டாகி யிருக்கின்றன.

தீமைகளுள் சிலவற்றைக் கூறுவோம்: (1) உண்டாக்குதலில் முதலாளிகள் தங்களிஷ்டப்படியே நடக்கின்றுர்கள். தொழில் செய்வோர்களுடைய சௌகரியங்களை அவ்வளவாக கவனிப்பதில்லை. (2) போட்டியினுல் கழுத்தையறுக்கும் போட்டி (cut throat competition) உண்டாகிறது. (3) அதனுல் சர்க்கார் சில சமயங்களில் குறுக்கிட வேண்டியிருக்கிறது.

இன்னும் எவ்வளவோ கூறலாம். ஆனுல் மிகப் பெருகும் என்றஞ்சி இவ்வதிகாரத்தை முடித்து விடுகிறேம்.

(தொடரும்.)

# தென்னாப்பிரிக்காவில் தமிழன்பர்.

தென்னாப்பிரிக்கா டர்பன்—உயர்திரு முனுசாமிப் பிள்ளை யவர்களை நமது வாசகர்களுக்குப் புதிதாக அறிமுகப்படுத்த வேண்டியதில்லை. அவர் நமது "போதினி"க்குப் பல வருஷங்களாகச் சந்தாதாரராக இருந்து வருகிறார். அத்துடன் அவர் தமது பொருள் பொதிந்த கட்டுரைகளால் "போதினி"யை அவ்வப்போது அலங்கரித்து வருகிறார். இப்போது நமது காரியாலய சார்பில் நடக்கும் "பிரசண்ட விகடனு"க்கும் சிறு கதைகளெழுதவும் முன் வந்திருக்கிறார்.



திரு. பிள்ளையவர்கள் இலங்கையில் 1903-ம் வருடத்தில், ஸ்ரீமான் சி. சங்கரன் பிள்ளைக்கும் ஆதிலட்சுமி அம்மாளுக்கும் அருந்தவப் புதல்வராகப் பிறந்தார். அவர் எக் காரணத்தாலோ தென்னாப்பிரிக்காவுக்குக் குடியேறி வாழ நேர்ந்தாலும், தாய் நாட்டையும், தாய் மொழியையும் ஒரு விநாடியும் மறந்தவரல்லர். தமிழ் மொழி மீதுள்ள ஆர்வத்தால் அவர் தென்னாப்பிரிக்கா முழுதும் அதைப் பரவச் செய்ய இடை விடாது முயன்று வருகிறார். அவர் தென்னாப்பிரிக்காவில் பல தமிழ்க் கழகங்களை ஏற்படுத்தி யிருக்கிறார். அத்துடன், அவர் தென்னாப்பிரிக்கா தமிழர் சங்கத்தின் கௌரவ காரியதரிசியாகவும், சரஸ்வதி சபைத் தலைவராகவும் இருந்து வருகிறார்.

கடந்த 13 வருடங்களாக இந்து தமிழ் வித்தியாலயத்தின் தலைமையாசிரியராக இருந்து வரும் திரு. பிள்ளையவர்களிடம் தமிழ்க் கல்வி பயின்ற மாணவர்கள் பலர் நெட்டாலிலுள்ள தமிழ்ப் பாடசாலைகளில் உபாத்தியாயர்களாக இருந்து வருகின்றனர்.

திரு. பிள்ளையவர்கள் பல பத்திரிகைகளுக்கு விஷயதானஞ் செய்வதுடனில்லாது, இரு ஆண்டுகளாக டர்பனில் நடந்து வரும், "செந்தமிழ்ச் செல்வன்" என்னும் பத்திரிகைக்கும் ஆசிரியராக இருந்து வருகிறார்.

இவர் பொதுவாகத் தமிழகத்துப் பத்திராசிரியர்கள், அறிஞர்கள் மீது மிகுந்த அன்புடையவர். தேசீய கவி பாரதியார் பாடல்களில் அவருக்கு அளவு கடந்த மோகம். பாரதியாரது தேசீயப் பாடலை யுணர்ச்சி ததும்பப் பாடி மகிழ்வார். பாரதியாரது பாடல்களைத் தென்னாப்பிரிக்காவில் பரவச் செய்தவர் இவரே என்றுஞ் சொல்லலாம். தென்னாப்பிரிக்காவிலுள்ள பல ஆங்கிலப் பத்திரிகைகள் இவரது கல்வித் திறமையையும், பெருமையையும் பாராட்டி எழுதி யிருக்கின்றன.

இத்தகைய தமிழன்பர் திரு. பிள்ளையவர்கள் கூடிய சீக்கிரம் இந்தியாவுக்கு வர விரும்புவதைக் கேட்டு நாம் மகிழ்கிறோம்.



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

## 48-வது காரிகை

*பேதஸ்மதஸோ அஷ்டவிதோ மோஹஸ்ய சதஸவிதோ மகாமோஹ:—*
*தாமிஸ்ரோஷ்டதஸதா ததாபவத்யந் ததாமிஸ்ர:*

(ஐந்துவித அறியாமையும் 62 வித பேதங்களாக நோக்கப் படுகின்றன.)

மருள் எட்டு வகையது; அகந்தையாகிய ஆணவமும் எட்டு வகையது; ஆசை பத்து வகையது; வெறுப்பு பதினெட்டு வகையது: திகில் காரணமாக விளையும் பற்றுனது பதினெட்டு வகையது. (திகிலே பதினெண் வகையதெனவுங் கொள்ளலாம்.)

உரை. ஆகவே ஐவகை யறியாமையும் அறுபத்திரண்டு வகுப்பினுள் அடங்கும்:—மருள் 8, ஆணவம் 8, ஆசை 10, வெறுப்பு 18, திகில் 18 ஆக 62.

மருள்—தானல்லா வொன்றைத் தானாகக் கருதுதல்.

ஆணவம்—தன் பாலுள்ள சக்திகளை (சித்திகளை) விடாது வீணே வகித்தல்.

ஆசை—விஷயங்களின் மேலிருக்கும் விருப்பம் ஒழியாமை.

வெறுப்பு—சித்திகளும் விஷயங்களும் தன்னை விட்டு நழுவுவதால் வரும் துவேஷம்.

திகில்—சித்திகளும் விஷயங்களும் தனது சுவாதீனத்தை விட்டு ஓடிப் போகுமோ வெனும் பயம்.

மருள். 8:—சித்தையும் ஆனந்தத்தையும் வேண்டி யாங்கு புரிதற்கு வாய்ந்த விளக்காகிய புத்தியைத் தானாக மதித்தல் 1; சப்தத்தையும், பரிசத்தையும், ரூபத்தையும், இரசத்தையும் எழுப்பி வெளி காட்டுதற்கமைந்த அகங்கார சக்தியைத் தானாகக் கொள்ளுதல் 1; அருகே யிருத்தியும், தூரத்தே செலுத்தியும் பணி வாங்குதற்கு இயைந்த மனத்தைத் தானெனக் கொள்ளுதல் 1; சப்தத்தையும், பரிசத்தையும், ரூபத்தையும், இரசத்தையும் கந்தத்தையும் தானாக வெண்ணுதல் 5; ஆக மருள் எட்டு வகையினை யுடையது.

ஆணவம் 8:—இவ் வாணவம், இந்திராதி தேவர்களிடத்து மிகவும் அமைந்து அவரை முத்திக் கரையேற வொண்டாது பிறவிச் சுழற் கண் திரும்பவும் திரும்பவும் புகுத்துகின்றது. அஷ்டமகா சித்திகள் காலக் கிர

மத்தில் நீங்கப் பார்க்கினும் அவற்றை விடாது வகிக்க ஆரம்பிக்கவே பிறவித் துன்பம் விளைந்து கொண்டிருக்கும். அஷ்ட சித்திகளைப் பதஞ்சலியார் யோக சூத்திரத்திற்கு எழுதியுள்ள உரையிற் காண்க. ஆயினும் அவற்றின் பெயர்களை இங்கு கூறுதும். அவை:—அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், வசித்துவம், ஈசத்துவம் என்பவைகளாம்.

ஆசை 10:—ஜாக்கிரத்தில் தோன்றும் சப்தாதி விஷயங்களையும் அரிய சொர்ப்பன வாயிலாக எழும் தெய்வீக சப்தாதிகளையும் பற்றி நிற்கும் விருப்பம் ஒழியாமை. இவ் விஷயங்கள் பத்தாகலின் ஆசையும் பத்தாகும்.

வெறுப்பு 18:—எட்டு வகைச் சித்திகளும் பத்துவகை விஷயங்களும் தம் வயத்தினின்று நீங்கப் பார்ப்பதால் எழும் துவேஷம் பதினெட்டாகும்.

திகில் 18:—எட்டுவகைச் சித்திகளும் பத்து விஷயங்களும் தன்னை விட்டு நீங்கி விடுமோ வென வெருக் கொள்ளல் பதினெட்டாகும்.

## 49-வது காரிகை

*யேகாதசேந்த்ரியபதா ஸஹபுத்தி பதைா சக்திருத்திஷ்டா—*
*சப்ததசபதா புத்தேர்விபர்ய யாத்துஷ்டி ஸித்திரும்.*

### இருபத்தெட்டு வகை வலிக்குறைவு.

இந்திரியங்கள் பதினொன்றின் கண்ணும் புத்தியின் மாட்டும் நேராக நின்ற விபத்துகள் வலிக்குறைவுகளாம். புத்தியின் மாட்டு நேரும் சக்திக் குறைவு பதினேழு வகையதாகும்; இதை எண் வகைச் சித்திகளும், ஒன்பது வகை மடியும் தம் நிலை திரிதலால் உண்டாவன.

உரை.

ஆகவே, இந்திரியக்கேடு 11. புத்திக்கேடு 17. ஆக 28.

| ஞானேந்திரியக்கேடு. | | கன்மேந்திரியக்கேடு. | |
|---|---|---|---|
| செவி | செவிட்டுத்தன்மை | வாக்கு | ஊமைத்தன்மை. |
| தோல் | குஷ்டம் (தோல்தடிப்பு) | பாதம் | கால் வாராமை. |
| கண் | குருட்டுத்தன்மை | பாணி | கை வாராமை. |
| நா | நாத்தடிப்பு | பாயுரு | அஜீரணம். |
| மூக்கு | மூக்கடைப்பு | உபத்தம் | வீரியக்குறைவு. |

### மனேந்திரியக் கேடு.

பைத்தியம். ஆக இந்திரியக்கேடு 11 விதம்.

புத்திக்கேடு 17 என்பதன் விளக்கம்.

### அஷ்ட சித்திகள் கை கூடாமை, 8.

1. அணிமா கைகூடாமை; தன்னறிவை நுணுகி ஓர் அணுவில் அடங்கும்படி செய்ய முடியாமை. அணிமாவே மூத்திக்கு வழி.

“சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்து, ஒன்றாய் திருப்பெருந் துறையுறை சிவனே” என்று இந்த அதி இரகசியத்தை விளக்கினர் திருவாசக அடிகளார்.

2. மகிமா கைகூடாமை; தனது இலிங்கத்தை வேண்டி யாங்கு பெருக்க முடியாமை, வாமனன் திரிவிக்கிரமனாய் நீண்டது மகிமா சித்தியாம்.

3. இலகிமா கைகூடாமை; தனது பாரத்தைக் குறைக்க முடியாமை. இலகிமா கைவந்தவரே ஜலமேல் நடக்கவல்ல சமர்த்தர்.

4. கரிமா கை கூடாமை, தனது பாரத்தையேனும் வேறு எப்பொருளின் பாரத்தையேனும் பெருக்க முடியாமை. பரமன் அமர்நீதி நாயனாரை ஆட்கொள்ளக் கௌபீனத்தின்பாற் காட்டிய சதுர்ப்பாடு கரிமாவாகும்.

5. பிராப்திகை கூடாமை; நினைத்த பொருளை லெட்ட முடியாமை காரைக்காலம்மையார் தெய்வீக மாங்கனியைக் கைக்கொண்டு கணவற்கு சமர்ப்பித்தது பிராப்தியாகிய சித்தியாகும்.

6. பிராகாமியங்கை கூடாமை; நினைத்தாங்கு எதனையும் ஊடுருத்துச் செல்ல முடியாமை; லெட்பீட்டர் என்பவர் எழுதிய "ஞானதிருஷ்டி" என்ற நூலில் பிலடெல்பியாவிலிருந்த ஓர் மகானது சரிதத்தில் பிராகாமிய சித்தியை விளங்கக் காணலாம்.

7. வசித்துவங் கை கூடாமை, பிறர் மனத்தையும் விலங்குகளின் மனத்தையும் தன் வயப்படுத்தி அவரது புத்தியை ஆட்கொள்ள முடியாமை. வசித்துவ சித்தியைப் பரமன் சுந்தரனை வன்றொண்டனாக்கித் தடுத்தாட் கொண்ட சரிதத்தால் தெளிக.

8. ஈசத்துவங் கை கூடாமை; ஒன்றையாக்கி, நிறுத்தி அழிக்கக் கூடாமைக் குழந்தைச் சிவஞானாகிய ஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய தன் கண் சிருட்டி திதிகளையும், புத்தன் தலையில் இடியை வீழ்த்தியதில் சங்காரத்தையும் தெரிந்து ஈசத்துவ சித்தியின் சொரூபத்ஸத நாடுக.

விவேகத்தை நிகழவொட்டாப் படபடப்பு 9 வகைத்து. (Too much impatience is of 9 kinds.)

இவ்வாத்திரம் உண்ணோக்கியும் வெளிநோக்கியும் நிகழும். உண்ணோக்கிய ஆத்திரம் பிரகிருதி, உபதானம், காலம், விதியாகிய நான்கையும்பற்றி நிகழும்; வெளிநோக்கிய ஆத்திரம் பஞ்சதன் மாத்திரைகளை நோக்கி யெழும்.

1. பிரகிருதி தானே வழிகாட்டவேண்டிய திருக்க என் இன்னும் வழி காட்டவில்லை என்னும் படபடப்பு.

2. கண் திறத்தற்குத் துறவே காரணமா யிருப்பதனால், அதற்கு உபதானமாகிய துறவை நான் வகித்திருக்குங்கால் என முத்திக்கு வெளிச்சம் பிறக்கவில்லை என்ற படபடப்பு.

3. காலமே எவற்றையும் சாதித்துத் தரவல்லதாயிருக்க, நாம் நெடுங் காலம் காத்திருந்தும் என் வெளிச்சம் பிறக்கவில்லை என்ற படபடப்பு.

4. யாவர்க்கும் எதனையும் விதியே சாதித்துத் தரவல்லதா யிருக்க, என்னுடைய விதி என் சாதித்து தரவில்லை என்ற படபடப்பு.

ஆக உள்ளாத்திரம் 4.

இனி வெளியாத்திரம் ஐந்தின் விபரம்:—

5. சப்தத்தை யுற்றுநோக்க அதன் சொரூபத்தைத் தெரிந்து கொள்

# விசித்திர விநோதம்



விஞ்ஞான சாஸ்திரப் போராசிரியர்:—"இந்த இடத்தைச் சுத்தம் பண்ணிய பின், இருந்தவைகள் இருந்த விடத்திலேயே இருக்க வேண்டும்."

வேலைக்காரன்:— அப்படியே.

*        *        *

உபாத்தியாயர்:— சாப்பிடுவதற்கு ஏற்ற காலம் எது?

பையன்:— பணக்காரர்களுக்குப் பசித்த பொழுது; ஏழைகளுக்குக் கிடைத்த பொழுது, சார்.

*        *        *        *

தாயார்:—(தன்னிடம் பெண் பேச வந்திருப்பவர்களிடம்) "என் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள விரும்புகிறவர் வருஷத்துக்கு ஐயாயிரம் ரூபாயாவது சம்பாதிக்கிற வரா யிருத்தல் வேண்டும். இல்லாவிட்டால், வேண்டியதில்லை. நான் அவள் படிப்பு விஷயமாய் ஐயாயிரம் ரூபாய் செலவு செய்திருக்கின்றது எனக்குத்தான் தெரியும்!"

மாப்பிள்ளை அபேக்ஷகர்:—"சரி! ஒரு உடன்படிக்கை ஏற்படுத்திக் கொள்ளலாம். எனக்கு வருஷாவருஷம் மூவாயிரம் ரூபாய் வருமானம் உண்டு. அவளை எனக்குக் கலியாணம் பண்ணிவைத்தால், நீங்கள் கொஞ்சம் லாப மடைவீர்கள். பிறகு நீங்கள் அவளுக்கு என்று செலவுக்காக, இரண்டாயிரம் ரூபாய் வருஷாவருஷம் கொடுத்தாற் போதுமானது."

---

ளாத வீணை சப்தத்தைச் செவியாலேற்று, ஏன் எனக்குச் சப்தத்தின் தந்திரம் புலப்படவில்லை என்று கோபங்கொள்வது.

6. பரிச தந்திரத்தையுற்று நோக்காது எனக்கேன் பரிசத்தின் இரகசியம் புலப்படவில்லை யெனக் கோபங்கொள்வது.

7. ரூபங்களை நோக்கிய வழியும், ரூபங் கண்ணிற்கு எவ்வாறு தரிசனமாகின்றதென உள்ளீட்டில் நாட்டத்தைப் பதிப்பிக்காது, ஏன் ரூபத்தின் இரகசியம் எனக்குப் புலப்படவில்லை யெனக் கோபங்கொள்வது.

8. இரசங்களைப் பருகியும் எனக்கு உருசியின் தந்திரம் ஏன் புலப்படவில்லையெனக் கோபங்கொள்வது.

9. கந்தங்களை மூகர்ந்தும் ஏன் எனக்கு அவற்றின் தந்திரம் தோன்றவில்லையெனக் கோபங் கொண்டிருத்தல்.

ஒரு மாலுமி (தனது மேலதிகாரி சமுத்திரத்தில் விழுந்து இருக்கக் கண்டு அவனைத் தூக்கிக் காப்பாற்றினன்.)

அதிகாரி:—(அவன் செய்த உதவிக்கு அவனை அதிகமாய்ப் புகழ்ந்து) "மற்றும் நாளைக்கு இவனை எல்லாருடைய முன்னிலையிலும் "சாங்கோபாங்க"மாக புகழாவிட்டால் நான் ஒரு மனிதனுவேனு? பார்!" என்றான்.

மாலுமி :—(பயந்து நடுக்கத்துடன்) "ஐயா! வேண்டாம். அப்படியெல்லாம் செய்யாதீங்க. அவங்கெல்லாம் என் தோலை உருச் செடுத்துப் புடுவாங்க."

* * * *

மானேஜர்:—நாம் இந்த கம்பெனியை திடீரென்று மூடிவிடப் போகிறோம் என்பதை ஓர் ரகசியமாகவே வைத்துக் கொள்ள வேண்டும்.



குமாஸ்தா:—நாலும் அப்படியே தான் கேட்கிறவர்களுக் கெல்லாம் சொல்லிக் கொண்டே வருகிறேன்.

* * *

ஜவுளிக்கடைச் செட்டியார்:— "அடே சின்னப்பயலே; ஐயர் வந்திருக்காரு, வாயிலெடு வாயிலெடு" என்றார்.

ஐயர்:-(பயந்து கொண்டு) "என்ன செட்டியாரே? என் முன்னல் வாயிலெடுக்கச் சொல்கிறீர்களே."

செட்டியார்:—"இல்லே சாமி ;) கோபிக்க வேண்டாம். சாத்தியிருந்த வாயிலே (கதவை)த் திறக்கச் சொன்னேன்.

* * * *

ஒரு ஸ்திரீ வைத்தியனிடம் போக எண்ணிச்சென்று ஒரு வீட்டையடைந்தாள்.

அவள்:—(தடபுடலாய் 'விஸிடிங் ரூமினுள்' சென்று) டாக்டர் எனக்கு என்ன வியாதி, என்று உண்மையைச் சொல்லிவிடுங்கள்.

அவர்:—(அவளைத் தலைமுதல் கால் வரையில் தன் தொழில் முறைப்படி கவனித்து பரிசோதித்துவிட்டு, கடைசியில் சொன்னதாவது) அம்மா! நான் சொல்லவேண்டிய விஷயங்கள் மூன்று. முதலாவது உங்க ளெடையில் ஐம்பது பவுண்டு குறையவேண்டும். இரண்டாவது, உமது அழகு கொஞ்சம் அபிவிருத்தியாக வேண்டும். அது சோப்பின் அதிக உபயோகத்திலுல்தான் முடியும். மூன்ருவதாக நான் ஒரு சித்திர மெழுதுபவன். டாக்டர் மேல் மாடியி லிருக்கிறார்.




### கொலைபுரிவதற்குப் பூ கருவியா ?

தென் அமெரிக்காவில் ஒருவர் கொலைபுரிவதற்குச் சில பூக்களைக் கருவியாகக் கொண்டாராம். அதாவது, அவர் கொல்ல வேண்டிய நோயாளி ஒரு அறையில் கட்டிலில் படுத்துறங்கிக் கொண்டிருந்தாராம். கொலையாளி, விஷத்தன்மை கொண்ட சில பூக்களை ஒரு பூந் தொட்டியில் வைத்து, அறைக் கதவுகளையும், ஜன்னல்களையும் அழுத்தமாக மூடிவிட்டாராம். அம் மலர்களின் வாசனை பிணியாளியின் மூக்கில் ஏற ஏற அவரது சுவாஸமும் ஒடுங்கிக்கொண்டே வந்ததாம். கடைசியாக, பூக்களின் வாசனை அவரை மரணமடையச் செய்துவிட்டதாம். இவ்வளவு சாமர்த்தியமாகக் கொலை செய்தும், கொலையாளி கண்டுபிடிக்கப்பட்டு தண்டனை விதிக்கப்பட்டாராம்.

***

### பதக்கங்களுக்குப் பதில் பழங்கள்

வீரர்களது தீரச் செயலைப்பாராட்டுவதற்கு அறிகுறியாக பதக்கங்கள் அளிப்பது வழக்கம். சீனாவிலோ ஒரு தளகர்த்தர் பதக்கங்களுக்குப் பதிலாக மூலாம் பழங்களைக் கொடுத்துவருகிறாராம். ஒரு அணிவகுப்புக்குப் பிறகு படைவீரர்களின் ஒழுங்கான தன்மையையும், தீரத்தையும் பாராட்டி, தளகர்த்தர் சங்லியாங் என்பார், 2 லட்சம் மூலாம் பழங்களை யளித்தாராம். இது ஒரு சிக்கனமுறை யல்லவா !

***

### பெண்ணின் வயிற்றில் இரும்புச் சாமான்கள்

நியூயார்க் நகரில் வசித்துவந்த மிஸ். மேபல் வுல்ப் என்னும் பெண்மணிக்குத் திடீரென வயிற்றில் வலிகண்டதாம். அதைச் சிகிச்சை செய்வதற்காக ஒரு டாக்டர் ஆபரேஷன் செய்தபோது, அப்பெண்ணின் வயிற்றில் 80 மறையாணிகளும், 83 குண்டூசிகளும், 77 நாதாங்கிகளும், 128 ஆணிகளும், வேறு பல இரும்புச் சாமான்களுமாக 1203 உருப்படிகள் இருந்தனவாம். அவைகளையெல்லாம் வெளியே எடுப்பதற்கு டாக்டர் மிகவுஞ் சிரமப்பட்டாராம். இது பற்றி அப்பெண்ணைக் கேட்கையில், "விளையாட்டாக இவைகளை வாயில் போட்டுக்கொண்டே வந்தேன்" என்று பதிலளித்தாளாம்.

***

### 8 வருஷத்திற்கப்பால் திரும்பிய புறா

லின்லிதோ என்னுமிடத்தில் 1928-ம் வருடம் அக்டோபர் மாதம் 5-ந் தேதி யன்று நடந்த புறாப் பந்தயத்தில் கலந்துகொள்ளும்படி ஒரு புறா வெளியே விடப்பட்டதாம். அப்புறா 8 வருஷகாலமாக எங்கெங்கோ பறந்து கடைசியாக இப்போது அதன் சொந்தக்காரரிடம் திரும்பியிருக்கிறதாம். இப்புறா இதற்குமுன் பல பந்தயங்களில் வெற்றிபெற்று பரிசுவாங்கியிருக்கிறதாம்.




பாம்புகள் நெடுங்காலம் எவ்வித ஆகாரமுமின்றியே காற்றை யுட்கொண்டு உயிர்வாழ்ந்திருக்குமாம்.

* * * *

கடற் பஞ்சைப்போன்று இப்பொழுதுதான் மனிதர்கள் செயற்கையாக செய்ய முடிந்ததாம்.

* * * *

கடந்த இருபது வருடங்களில் உலகில் 45 தேசங்களில் புரட்சி நடந்திருப்பதாகக் கணக்கெடுக்கப்பட் டிருக்கிறது.

* * * *

தேனீராணி யொன்று ஒரு பருவத்தில் 100,000 முட்டைகளிடுகிறதாம்.

* * * *

இங்கிலீஷ் கால்வாய் சராசரி 180 அடி ஆழமுடையதா யிருக்கிறதாம்.

* * * *

உலகில் எப்பாகத்திலாயினும் தினம் சராசரி 2,750,000 டன் மழை பெய்கிறதாம்.

* * * *

விஞ்ஞான சாஸ்திரிகள், கண்ணாடியை மெல்லிய நூலாக நூற்று துணி நெய்யும் விதத்தைக் கண்டுபிடித்திருக்கின்றனர்.

* * *

கி. பி. 1494-ம் ஆண்டில்தான் முதன் முதலாக, சமாசாரப் பத்திரிகை வெளியிடப்பட்டதாம்.

* * * *

எலி, முயல் போன்ற பிராணிகளின் பற்கள் வளர்ந்துகொண்டேயிருக்குமாம்.

* * * *

வானத்தில் மேகங்கள் சராசரி மணிக்குச் சுமார் 36 மைல் வேகத்தில் சஞ்சரிக்கின்றனவாம்.

* * * *

குதிரைகளுக்குக் கண் புருவமும், மீன்களுக்குக் கண்ணின் கருமணியும் கிடையாதாம்.

* * * *

நாம் ஒவ்வொருவரும் தினந்தோறும் 35 பவுண்டு காற்றை உட்கொள்ளுகிறோம் எனக் கூறப்படுகிறது.

* * * *

ஒலியின் வேகம் ஒரு விநாடிக்கு 1120 அடி அல்லது மணிக்கு 743 மைல் தூரஞ் செல்கிறதாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## ஐரோப்பாவில் கொந்தளிப்பு

பிரம்மஞான சங்கத்தின் தலைவரான ஸ்ரீ. அருண்டேல் சமீபத்தில் ஐரோப்பாவுக்குச் சென்று சுற்றுப் பிரயாணம் செய்து விட்டுத் திரும்பினார். அவர் அங்கு கண்டதென்ன? எப்போது இந்தியாவுக்குத் திரும்பி விடலாம் என்று அவர் சதா நினைத்துக் கொண்டிருந்தாராம். அதன் காரண மென்ன! எங்கும் கொந்தளிப்பு தான். அமைதியோ சமாதானமோ அங்கு கிடையாது. அவர் இந்தியாவுக்குத் திரும்பியதும் ஒரு பத்திரிகை நிருபரிடம் பேசுகையில், 'இரண்டொரு தேசங்களைத் தவிர ஐரோப்பா முழுதும் ஒரே கொந்தளிப்பாக இருக்கிறது. இதெல்லாம் மற்றொரு உலக யுத்தத்திற்கு அறிகுறி என்றே எனக்குத் தோன்றுகிறது. அவ்வாறு ஒரு உலக யுத்தம் ஏற்படுமாயின் நமது நாகரிகம் சிதறுண்டு போகும்!' என்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. மேலும் அவர், இப்பால் ஐரோப்பாவில் தோன்றி வரும் ஒவ்வொரு சர்வாதிகாரியும் தத்தம் நாட்டின் க்ஷேமத்தில் மட்டும் கருத்துக் கொண்டவர்களாக இருக்கிறார்களே யொழிய உலக க்ஷேமத்தைக் கோரும் அரசியல் ஞானிகளல்லர் என்று கூறுகிறார். ஆதலால் பொதுவாக உலக மக்களின் க்ஷேமத்தையும் தனிப்பட்டவர்களின் உரிமைகளையும் பாதுகாக்கக் கூடிய உணர்ச்சி எங்கும் பரவுதல் வேண்டும் என்று ஏற்படுகிறதல்லவா? அத்தகைய உணர்ச்சி அதிகரிக்க வேண்டுமாயின் முக்கியமாக ஏகாதிபத்ய ஆசை ஒழிய வேண்டும். வல்லரசுகள் பரஸ்பரம் சந்தேகங் கொள்வதை விடுத்து அன்புடனும் சமத்துவமாகவும் இருக்க வேண்டும். இது மட்டுமா! கேவலம் மிருக சுபாவம் மட்டும் மக்களுக்கு இருக்காமல் ஆன்மார்த்த ஞானமும் உலகினர்க்கு ஏற்பட வேண்டும், இதை யெல்லாம் செய்ய ஐரோப்பிய நாகரிகம் இடங் கொடுக்கிறதா! ஆதலின் நாகரிகத்தையே மாற்றி அமைக்க வேண்டும். அந்த வல்லமை பண்டைப் பெருமை வாய்ந்த இந்தியாவுக்குத்தான் உண்டு. ஆதலின் உலக க்ஷேமத்திற்கு அஸ்திவாரம் இந்தியா சுதந்தரம் அடைவது தான் என்று பல பெரியார்கள் கூறுகிறார்கள். இதை ஐரோப்பா கவனிக்குமா?

---

## வெல்லிங்டன் பிரபுவின் பேச்சு

இங்கிலாந்தில் சென்ற வாரத்தில் நடந்த இரண்டு சம்பவங்கள் இந்தியாவுக்குச் சம்பந்தப் பட்டவைகளாக இருக்கின்றன. முதலாவது எட்வர்ட் மன்னர் பார்லிமெண்ட் சபையின் புதிய கூட்டத்தை ஆரம்பித்து வைக்கையில் பிரசங்கம் செய்த போது இந்தியாவுக்கு அளிக்கப்பட்டுள்ள புது அரசியலை இந்தியர் நிறைவேற்றி வைப்பார்க ளென்று தாம் நம்புவதாகவும், தமது மகுடாபிஷேகத்திற்குப் பிறகு இந்தியாவுக்கு விஜயம் செய்யப் போவதாகவும் கூறினார். சக்கரவர்த்தி என்னும் முறையில் அவரிடம் இந்தியர்களுக்கு எப்போதும் மரியாதையும் விசுவாசமும் உண்டு. ஆயினும் இந்தியர் அதிருப்தியடைந்துள்ள ஒரு அரசாங்க முறையை மாற்றவே அவர்கள் விரும்புகின்றனர். அதற்குத் துணையாக மன்னர்பிரான் இருக்க வேண்டு மென்பது தான்

இந்தியர்களின் ஆவல். புது அரசியலை இந்தியர்கள் விரும்பவில்லை. ஆனால் ஒரு சிலர் ஏற்று நடத்தத் தயாராக இருந்த போதிலும் காங்கிரஸ் அதைத் தகர்த்து விரைவில் நல்ல அரசியல் ஏற்படும்படி செய்ய விரும்புகின்றது. இதைப்பற்றி மாஜி வைசிராய் வெல்லிங்டன் பிரபு டெவான்ஷயர் சங்கத்தினர் விருந்தில் பேசிய போதும் இந்தியரின் சுபாவத்தைப்பற்றி அலக்ஷியமாகப் பேசியிருக்கிறார். எந்த சீர்திருத்தத்தையும் இந்தியர் முதலில் எதிர்ப்பார்களென்றும் பிறகு ஒத்துப் போவது அவர்கள் வழக்க மென்றும அவர் கூறுகிறார். அவர் கண்ட இந்தியா வேறு; இப்போதிருக்கும் நிலைமை வேறு என்பதை அவர் அறியார்போலும்! இதற்கு முன் சீர்திருத்தங்கள் வழங்கப்பட்ட காலத்தில் மிதவாதிகள், ஜஸ்டிஸ் கட்சியினர் போன்ற பிற்போக்காளர்களே அதிகமாயிருந்ததால் அவர்கள் ஒருகால் அப்படிச் செய்திருக்கலாம். ஆனால் இப்போதோ வெல்லிங்டன் பிரபு போன்ற அடக்குமுறை வீரர்களின் உதவியால் இந்தியாவில் சுதந்தரதாகம் அதிகரித்திருக்கிறது; காங்கிரஸ் மிக்க செல்வாக்கை அடைந்திருக்கிறது. ஆதலால் அது சட்டசபைகளைக் கைப்பற்றிப் புது அரசியலைத் தகர்க்கத் தன்னாலியன்றவரை முயற்சிக்கப் போவது நிச்சயம். ஆதலின் வெல்லிங்டன் பிரபு சம்பிரதாய மென நினைத்த ஒன்று இனியும் சம்பிரதாயமாக இருக்கா தென்பது நிச்சயம்.

---

## சமதர்ம ஆட்சியின் அவசியம்

நாட்டின் உற்பத்தியையும் விநியோகத்தையும் அரசாங்கமே ஏற்றுக் கொண்டு நடத்தி எல்லா மக்களும் உண்ண உணவுக்கும் உடுத்த உடைக்கும் தங்க இடத்துக்கும் கஷ்டப்படாமல் சர்க்கார் ஆதரவில் அவற்றைக் கட்டாயமாகப் பெற்று சமத்துவமான வாழ்க்கையை அநுபவிக்கும்படி செய்வது தான் சமதர்மத்தை அடிப்படையாகக் கொண்ட ஆட்சி முறையாகும். இம்முறை ஒவ்வொரு தேசத்துக்கும் இன்றி யமையாததாகும். ஆனால் சமதர்மம் என்னும் பேரால் பாசிஸம், பொது வுடைமை போன்ற பலாத்கார ஆட்சி கூடாது. மேல் நாடுகளில் அப்படிப்பட்ட குழப்பமான நிலைமைதான் ஏற்பட்டு வருகிறது. சமதர்மத்தை அடிப்படையாகக் கொண்ட ஜனநாயக ஆட்சிதான் சர்வ சிலாக்கியமானதாகும். இந்த அபிப்பிராயத்தைத் தான் மைசூர் திவான் சர். மிர்ஜா இஸ்மாயிலும் மைசூர் ஜனப்பிரதிநிதி சபையின் தசரா கூட்டத்தை ஆரம்பித்து வைக்கையில் அறிவித்துள்ளார். அவர் சமீபத்தில் மைசூர் மகாராஜாவுடன் ஐரோப்பாவுக்குச் சென்று திரும்பினார். அங்குள்ள நிலைமைகளை நன்கு அறிந்த பின்னரே அவர் இந்த அபிப்பிராயங்களை அறிவித்துள்ளார். ராஜாங்க அபேதவாதம் மிக அவசியமென்பதை அவர் நன்கு தெரிந்து கொண்டு அதை ஜனப் பிரதிநிதி சட்டசபையில் தைரியமாக எடுத்துச் சொன்னது பாராட்டத் தக்கதாகும். அவர் தமது பிரசங்கத்தில் 'இந் நாட்டில் தனிப்பட்டவர்கள் துணிகரமாகப் புதிதாகக் கைத்தொழில்களை ஆரம்பித்து லாப நஷ்டங்களுக்குப் பயப்படாமல் முயற்சி செய்ய முன் வருவதில்லை; பணமுள்ளவர்களும் தைரியமாகப் புதுக் கைத்தொழில்களை தமது பணத்தை மூலதனமாகப் போட்டுப் பரீக்ஷை பார்க்கக் கூசுகிறார்கள், ஆதலால் வர்த்தகத்திலும் கைத் தொழிலிலும் சர்க்கார் நேரிலேயே பிரவேசிப்பது இந் நாட்டில் அவசியமாகிறது. கம்பெனிச் சட்டத்தைத் திருத்துவது, தொழிலாளர் வேலை நேரத்தை ஒழுங்கு படுத்து

வது போன்ற சட்டங்களை இயற்றிவிட்டு சர்க்கார் சும்மா இருந்து விடுவது என்னும் கொள்கை இந் நாட்டுக்குப் பொருந்தாது' என்று கூறி யிருப்பது அனைவராலும் கவனிக்கத் தக்கது. சர் மிர்ஜா கூறுவது போல பல கைத் தொழிற் சாலைகளுக்கும் சர்க்காரே சொந்தக்காரராக இருப்ப தென்னும் கொள்கை இந் நாட்டுக்கு மிக அவசியமானதாகும். அப்போதுதான் கைத் தொழில் துரிதமாக வளர்ச்சி யடையும்.

---

## இது கனவல்ல மேனாட்டு அனுபவம்

ஒருவரின் தேகத்துக்கு இரத்தம் எப்படி முக்கியமோ அப்படியே ஒரு தேசத்தின் பொருளாதார அபிவிருத்திக்கு நாணய மதிப்பும் பரிவர்த்தனை விகிதமும் மிக முக்கியமானதாகும். இப்போது உலகில் ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியைத் தீர்ப்பதற்கு நாணய மதிப்பைக் குறைத்தலே மார்க்கமென்று கண்டு பல தேசங்களும் அவ்வாறு செய்துவிட்டன. ஆனால் இந்தியா சர்க்கார் அதைச் செய்ய முன் வரவில்லை. இதர தேசங்கள் சுதந்தர முடையவை யாதலால் பிறர் தயவு தாக்ஷண்யம் அவசியமின்றித் தங்கள் காரியத்தை முடித்துக் கொண்டன. ஆனால் இந்தியாவின் நிலைமை வேறு அல்லவா? இங்குள்ள அர்த்தசாஸ்திர நிபுணர்கள் ரூபாயின் மதிப்பைக் குறைக்க வேண்டிய அவசியத்தை நன்கு விளக்கி வருகிறார்கள். இது விவசாயிகள் நிரம்பிய தேசம். அவர்கள் உற்பத்தி செய்யும் விளைபொருள்கள் மூலம் கிடைக்கும் பணம் தீர்வைக்கும் போதுமானதாக இல்லை. ஆகவே அவர்களுடைய வருவாயைப் பெருக்கி அவர்கள் சுகமாக இருக்கும்படி செய்ய வேண்டுமானால் ரூபாயின் மதிப்பைக் குறைக்க வேண்டும். அதனால் அவர்களின் கடன்பளு குறையும். விளை பொருள்களின் விலையேறும். வியாபாரம் பெருகும்; தொழில்கள் அபிவிருத்தி யடையும். வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியும். தேசம் சுபீக்ஷத்தை அடையும். இது கனவல்ல; மேனாட்டு அனுபவம். ஆனால் இந்தியா சர்க்கார் ஏதோ சாக்கு போக்குகளை சொல்லிக் கொண்டு காலதாமதம் செய்து வருவது வருந்தத்தக்க விஷயமாகும்.

---

## சென்னையில் காங்கிரஸ் ஆட்சி

காங்கிரஸ் மகாசபை இந்தியாவில் சுயராஜ்யத்தை ஸ்தாபித்து மக்களுக்கு இதத்தைச் செய்ய முனைந்திருக்கிறது. அதற்கு அஸ்திவாரமாக அம் மகாசபை இப்போது சென்னை நகரத்தைக் கைப்பற்றி இருக்கிறது. எவ்வாறெனின், சென்னை மகாசபைத் தேர்தலில் காங்கிரஸ், முதன் முதலாக மெஜாரிட்டி கட்சியாக வெற்றி பெற்று ஆதிக்கத்துக்கு வந்திருக்கிறது. ஆல்டர்மென்களும் காங்கிரஸ் காரர்களாகவே இருக்கிறார்கள். தேர்தலிலும் 40 டிவிஷன்களில் 27 காங்கிரஸ் கட்சி அபேக்ஷகர்களும், இரு சுயேச்சை காங்கிரஸ் வாதிகளுமாக 29 பேர் வெற்றி பெற்றதிலிருந்து மொத்த ஓட்டர்களில் ஐந்திலொரு பாகத்தினரே ஜஸ்டிஸ் கட்சியை ஆதரிக்கிறார்க ளென்று தெரிகிறது. ஆகவே சென்னை மகாஜனங்களில் முக்கால் வாசிக்கு மேற்பட்டவர்கள் ஜஸ்டிஸ் கட்சியை விரும்பவில்லை யென்பதும், காங்கிரஸ் ஆட்சியையே விரும்புகிறார்க ளென்பதும் பிரதிசனமாகின்றது. காங்கிரஸ் அட்ஹாக் கமிட்டியார் இன்னும் சிறிது ஜாக்கிரதையுடன் வேலையைச் செய்திருந்




# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(319-ம் பக்கத் தொடர்ச்சி.)

சிறிது நேரத்திற்கெல்லாம் இரண்டு புரவிகள் காட்டில் நுழைந்து வெகு வேகமாக கீழ்த்திசை நோக்கிப் போய்க்கொண்டிருந்தன. ஒன்றில் ஓர் மூடவன் சவாரி செய்தான். மற்றொன்றில் சர்தார் ஹூஸேனும் அவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அவன் பின்னால் உட்கார்ந்தபடியே இலக்ஷ்மிபாயும் சவாரி செய்தார்கள்.

## ஒன்பதாம் அத்தியாயம்

இந்த இறுதி அத்தியாயத்தில் அரண்மனையினின்றும் தப்பி ஓடிய காதலர்களும் அற்புத மனிதனான நொண்டிச் சேவகனும் என்னகதி யானார்கள் என்பதைக் கவனிப்போம்.

குதிரைகள் சுமார் அரைகாத வழி தூரம் ஓடிய பிறகு பாதை காடு முரடாயும் புதர்கள் அடர்ந்தும் இருந்ததோடு குதிரைகளும் சற்றுக் களைத்துப்போயிருந்தன. ஆதலால் மெதுவாய் நடந்து போய்க்கொண்டிருந்தன.

இப்போது இலக்ஷ்மிபாய் தனது மனதை வெகு நேரமாய்ச் சங்கடப்படுத்திக்கொண்டிருந்த அநேக சந்தேகங்களை நிவர்த்தி செய்துகொள்ள எண்ணினாள். குரூபி யார் என்றும் அவனைப் பற்றிய ரகசியம் என்னவென்றும் சொல்லும்படி அவனைப் பிடிவாதப்படுத்தினாள்.

"அம்மா அந்த ஒரு கேள்வி மாத்திரம் கேட்கவேண்டாம். உனக்கும் உன் அருமைக் காதலனுக்கும் தொண்டு செய்யும் ஊழியனாக கடவுள் என் தலையில் விதித்துவிட்டார். இந்தத் தொண்டில் எனக்குப் பிரம்மானந்தம் இருக்கிறது. நினைத்துப் பார்த்தால் இப்பூவுலகில் நான் உயிரை வைத்துக் கொண்டிருப்பதற்கே அருகனில்லை. பார்த்தவர்கள் பயப்படும்படியான

---

தால் மற்றும் இரண்டு மூன்று ஸ்தானங்கள் காங்கிரசுக்குக் கிடைத்திருக்கு மென்பதில் ஐயமில்லை. இப்போது நகர சபையில் ஆதிக்கம் பெற்றுள்ள காங்கிரஸ் மகாசபையினர், பிற்கால சுயராஜ்யம் மக்களுக்கு எவ்வளவு நன்மையைத் தரக்கூடியதாக இருக்கு மென்பதற்கு ஒரு சாம்பிளே போல் தங்கள் நிர்வாகத்தைச் செவ்வனே நடத்தி சென்னை மகாஜனங்கள் எல்லாருடைய ஆதரவையும் பெற முயற்சிப்பார்க ளென்று ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.

கோர ரூபத்தோடு நான் என் உயிர் வாழவேண்டும்? உங்களை வேண்டியே நான் என் ஆவியை வைத்துக்கொண்டிருக்கிறேன்'' என்று அம்மனிதன் துயரத்தோடு சொன்னான். அப்போது அவன் கண்ணிலிருந்து வடிந்த கண்ணீரை இருட்டில் யார் காணப்போகிறார்கள்? இந்த வார்த்தைகளைக் கேட்ட ஹூசேனின் மனம் கரைந்தது.

"நண்பரே! எனது உயிரைக் காப்பாற்றிய அன்பரே! தாங்கள் எந்த புண்ணிய தேசத்தைச் சேர்ந்தவரோ? தங்களை ஈன்ற புண்ணியவான்கள் யார்? நான் தங்களின் சரித்திரத்தை அறியவேண்டும். துக்ககரமாயிருந்தால் நானும் துக்கிக்கவேண்டும். என் உயிருள்ள வரையிலும் தங்களை நினைத்து நான் பூஜிக்கவேண்டும். தியாகமூர்த்தியாகிய உங்களுடைய பெயரை பூவுலகில் நிலைநாட்ட வேண்டும்'' என்று மன்றாடினான் பாலவீரன்.

"இந்தக் கேள்விகளெல்லாம் என்னைக் கேட்கக்கூடாது. அவைகளுக்கு நான் பதில் சொல்லமாட்டேன். நான் ஓர் காரியம் கோரியிருக்கின்றேன். அது பூர்த்தியாகியதும், என் பிராணன் இந்தப் பாழும் உடலைவிட்டு நிம்மதியாய் நீங்கும். பூவுலகில் நின்றும் நான் அடியோடு மறைவேன். அதன் பிறகு—அவன் வாக்கியத்தை பூர்த்தி செய்யவில்லை.

"அந்த கோரிக்கைதான் இன்னதென்று எங்களுக்கு—உங்களால் உயிர் பிச்சைப் பெற்ற எங்களுக்குத் தெரிவிக்கக்கூடாதா?'' என்று கெஞ்சினான் ஹூசேன். இப்பொழுது அவனுக்கும் அவன் காதலியாகிய மஹாராஷ்டிர வீர மாதுக்கும் அவ்வற்புத மனிதனிடத்தில் பரம பக்தி உதித்துவிட்டது. இந்நிலைமையில் அவர்கள் யாவரும் தங்கள் குதிரைகள் நடக்காமல் நின்றுவிட்டதைக்கூடக் கவனிக்கவில்லை. துயரத்தில் யாருக்குத்தான் அச்சம் தோன்றும்?

"என் உயிருக்கு மேலான ரத்னங்களே! எனது கோரிக்கையா?—உங்களிருவரையும்—ராஜனும் ராணியுமாக என் கண்குளிரப் பார்ப்பதே என் கோரிக்கை!'' என்று சொன்னதும் அம்மனிதன் ஒரு பெருமூச்சு விட்டான்.

"என்ன, என்ன?'' என்று அவசரமாய்க் கேட்டாள் இலக்ஷ்மிபாய்.

"ராஜனா? நானா? அநாதியான நானா? ஆ! கடவுளே! எங்களிருவருக்கும் இடையில் ஹிமயகிரியைப்போல் ஓர் பிரம்மாண்டமான தடை இருக்கின்றதே. நாங்கள் எவ்வாறு உலகம் சம்மதிக்க திருமணம் செய்துகொள்ள முடியும்?''

"ஓ! நீ முஸ்லிமாய்ப் பிறந்துவிட்டதினால் இடையூறாய் இருக்கிறதென்றுதானே நினைக்கின்றாய்? பூ! அதைப் பற்றி நீ கவலைப்படாதே! ஹிந்து முஸ்லீம் கலப்புத் திருமணம் ராஜ குடும்பங்களில் கணக்கில்லாமல் நடந்திருக்கின்றன. அது போனால் போகட்டும்—வேறொரு ரகசியம் இருக்கின்றது. அது எனக்கு மட்டும்தான் தெரியும். இந்தியா முழுவதும் அலைந்து திரிந்தாலும் அந்த ரகசியம் தெரிந்த ஒருவராவது அகப்படமாட்டார்கள். இந்தக் குரூபி மாண்டுவிட்டால்—என் தலையோடு அந்த அரிய ரகசியமும் சாம்பலாகிவிடும். இந்த ரகசியத்தை பிரதாபசிங் மஹாராஜா மாத்திரம் அறிவாரானால்—அறிவாரானால்—இலக்ஷ்மிபாய்க்கும்—இம் ம் ம்......ஹூசேனுக்குத் திருமணம் தமது அரண்மனையிலேயே செய்து வைப்பார்.''

"அப்படியானால் நீங்கள் ஏன் ராஜாவிடம் அந்த ரகசியத்தைச் சொல்லவில்லை."

"அந்த ரகசியம் மட்டும் எனக்குத் தெரியுமேயொழிய அதை ருஜூப்படுத்திக் காண்பிக்கக்கூடிய ஆதாரம் என்னிடம் இப்போது இல்லை. ஆதலால் இந்த நிலைமையில் அந்த ரகசியத்தை வெளியிட ஆரம்பித்தால் எனக்குக் கிடைக்கும் வெகுமதி மரண தண்டனைதான்! எனவே டில்லிமாநகரம் சென்று போதிய ஆதாரத்துடன் வரலாமென்றிருந்தேன். அதற்குள் அந்த துஷ்டன் மாபத்கானால் காரியம் விபரீதமாய் முடிந்துவிட்டது. இப்போதும் காரியம் மிஞ்சிப்போய்விடவில்லை. நாம் இப்பொழுதே தரங்கம்பாடிக்குச் சென்று, அங்கிருந்து கப்பலேறி சென்னப்பட்டணம் செல்லவேண்டும். அங்கே ஆங்கிலேயருடைய பாதுகாப்பில் உங்களிருவரையும் வைத்துவிட்டு நான் டில்லிக்குப் பிரயாணமாவேன். நான் வெற்றியோடு திரும்பிவந்தால்—!"

சிறிது நேரம் எல்லோரும் மௌனம் சாதித்தார்கள்.

"ஆ, அந்தப் பொய்க் கடிதத்தில் விஷயம் நாம் ஆங்கிலேயரிடம் சொல்லிவிடக்கூடாது, ஏனெனில் அவர்கள் ஆத்திரப்பட்டு இதுவே போதுமான காரணமாய் வைத்துக்கொண்டு தஞ்சையின் பேரில் யுத்தம் ஆரம்பித்துவிடுவார்கள். மன்னர் பேரில் எள்ளளவு குற்றமேனும் இல்லை. அவர் உன் பேரில் அடங்காத ஆசையும் பெருமையும் கொண்டிருந்தார். இந்தப் பாதகன்! மாபத்கான் அடாத சூழ்ச்சிசெய்து அவர் மனதை மாற்றிவிட்டான். பாவி! அவன் அன்று குஸ்திப் பந்தயத்தினன்று—உனது ஷர்பத்தில் மயக்க மருந்துபோட்டிருந்தான். அதை அறிந்துதான் நான் அதைத் தட்டிவிட்டேன். இல்லாவிட்டால், நீ அதைப் பருகினால் மயக்கங் கண்டு விழுந்திருப்பாய். மாபத்கான் ஜெயித்துவிட்டதாக மார்புதட்டிக்கொண்டு வந்திருப்பான்."

இப்புதிய சங்கதியைக் கேட்ட இலக்ஷ்மிபாயும் ஹுசேனும் வியப்புற்றவர்களாய் இன்னது சொல்வதென்று தெரியாமல் தயங்கினார்கள்.

"கடைசியில் ஓர் அபூர்வக் கிழவன் வந்து சர்தாருக்குச் சமானமாய் குஸ்தி செய்தாரே, அவர் யார்?" என்று தனது பழைய சந்தேகத்தைக் கேட்டுக்கொண்டாள் இலக்ஷ்மிபாய்.

"ஓ! அவரா? அவர்தான் பிரதாபசிங் மஹாராஜா. ஹுசேனின் பலத்தைச் சோதிக்க தாமே மாறு வேஷத்தில் வந்தார்.

இதைக் கேட்டதும் காதலர்களுக்குண்டான வியப்புக்கும் சந்தோஷத்திற்கும் அளவேயில்லை. இந்தக் குதூகலத்தில் அவர்கள் தங்கள் ஆபத்தான நிலைமையையே பூராவும் மறந்துவிட்டார்கள்.

இப்பொழுதுதான் வெகு வேகமாய் ஓடிவரும் குதிரைக் காலடி சப்தம் கேட்டு யாவரும் திடுக்கிட்டார்கள். அடுத்த க்ஷணத்தில் ஓர் குதிரை இரண்டு உருவங்களைச் சுமந்துகொண்டு வாயு வேகமாய்ப் பறந்து சென்றது. கொம்புகளும் தாரைகளும் ஊதிக்கொண்டு அநேக குதிரை வீரர்கள் அதைத் துரத்திக்கொண்டு ஓடினார்கள். நமது குரூரன் பிரமித்துவிட்டான். ஆனால் அவர்களை ஒருவரும் கவனிக்கவில்லை. மறுபடி அவர்களின் கண்ணில் படுவதற்குள் நமது இரண்டு புரவிகளும் ஆலமரத்துக்கும் பின்னால் இருண்ட பாகத்திற்குக் கொண்டுபோகப்பட்டன.

சிறிது நேரத்தில் ஓடியவர்கள் யாவரும் திரும்பிவந்தார்கள். எல்லோரும் குதிரையைவிட்டிறங்கி மேலே சொன்ன ஆலமரத்தின் கீழ் தங்கினார்கள். அப்பொழுது அந்தக் கூட்டத்திலிருந்து பயத்தினால் அலறி அழும் ஓர் பெண்ணின் குரல் நமது கதா நாயகர்கள் மறைவாய் நிற்கும் இடத்திற்கு எட்டியது. இந்தப் பரிதாபமான குரலைக் கேட்டதும் அவனது கை 'நெய்கினியின்' பிடியைப் பற்றியது. அவனது அரும்புபோன்ற மீசைத் துடித்தது. ஓரேப் பாய்ச்சலில் அந்தக் கூட்டத்திற்குள் புகுந்து யாவரையும் சின்னாபின்னப்படுத்திவிட்டு அப்பெண்ணை மீட்டுத் தங்களுடன் கொண்டு போகலாமாவென நினைத்தான். இலக்ஷ்மிபாயின் உடல் பதறியது. குருநான் ஹூசேனை யணுகினான். ஹூசேன் அவன் கையைப் பற்றினான். அது வெட வெடவென்று நடுங்கியது. ஏன்? பயத்தினாலா? ஒருகாலுமில்லை! கோபாவேசத்தினால்! ஆனால் அவன் தனது கோபத்தை யடக்கிக்கொண்டதும் அல்லாமல் ஹூசேனின் கோபத்தையும் தணித்துத் தங்களது அபாயகரமான நிலைமையை ஞாபகமூட்டினான்.

"ஐயோ, ஐயோ! அம்மாவே! அம்மாவே!" என்று வீறிட்டு அழும் பரிதாபமான குரல் மறுபடியும் கேட்டது.

"என்பேரில் பிசகில்லை. அந்த மனிதன்தான் என்னை மோசம்பண்ணி அழைத்து வந்துவிட்டான். ஐயோ, ஐயோ; அல்லா. அல்லா. நான் மவுத்தாப்போய்விடுவேன். அடிக்கவேண்டாம்" என்று அந்தப் பெண் இந்துஸ்தானியில் சொல்லி அழுதாள்.

"தாக்ஷண்யம் என்னடா? கொன்றுவிடு அவளை கொல்லு அந்த பழிகாரனையை. உங்களால் முடியாவிட்டால் அப்பால் போங்கள் நான் என் கையினாலேயே அவள் உயிரை வாங்கி பழி தீர்க்கிறேன்" என்று கர்ஜித்தது ஒரு குரல். இந்தக் குரல் நமது நண்பர்களுக்கு எங்கேயோ கேட்டதுபோலிருந்தது. மூவரும் திடுக்கிட்டு சிறிது நேரம் யோசித்தார்கள்.

"ஆ! அது மாபத்கான்!" என்றான் குருநான்.

"அலறி யழுகிறது அவன் மனைவி!" என்றாள் இலக்ஷ்மிபாய்.

இப்பொழுது எல்லாம் விபரமாய்த் தெரிந்துவிட்டது. மகபத்கானுடைய மனைவியை யாரோ ஒருவன் அபகரித்துக்கொண்டு ஓடிவிட்டான். அவர்களிருவரையும் துரத்திப்பிடித்து விட்டார்கள். அவளை அழைத்துக் கொண்டு ஓடிய ஆள் யார்?

"சர்தார், சர்தார், பாச்சாசாஹேபு இறந்துவிடுவான்போலிருக்கின்றது. நீங்கள் வெட்டிய காயத்திலிருந்து ஏராளமான உதிரம் சேதமாகிவிட்டது. இனி அவன் பிழைக்கமாட்டான்' என்று ஓர் ஆள் ஓடிவந்து சர்தார் மாபத்கானிடம் சொன்னான்.

"மோசக்காரப் பயல்—திருட்டுப் பயல்! இன்னுமா அவன் சாகவில்லை. எங்கே? அவனிடமிருந்து எடுத்த பட்டுப்பை. அதைகூட அவன் நம்மிடமிருந்து அவன் களவாடிக்கொண்டு போயிருக்கிறான் பார்."

"உங்களிடம் ஏதோ அவசியமான வார்த்தை ஒன்று சொல்லவேண்டுமாம். உடனே அழைத்து வரும்படி சைகை காண்பிக்கிறார்" என்று மற்றோர் ஆள் ஓடிவந்து சொன்னான்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

தாது௵ கார்த்திகை௴—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1355,
இங்கிலீஷ் 1936௵ நவம்பர்௴—டிசம்பர்௴

| கார்த்திகை | நவம்பர்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | திங் | துதி21-23 | கே46-18 | சித்60 | மூடமுழுக்கு, கரிநாள் |
| 2 | 17 | செவ் | திரி26-5 | மூல51-48 | அ51-48சி | ஆலோசன கௌரி விரதம் |
| 3 | 18 | புதன் | சது29-40 | பூரா56-12 | அ௴60 | மாசசதுர்த்தி விரதம் |
| 4 | 19 | வியா | பஞ்32-3 | உத்59-25 | சித்60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 5 | 20 | வெள் | சஷ்32-53 | திரு60 | மர60 | சஷ்டி, கந்தர்சஷ்டி, சூரசம்ஹாரம் |
| 6 | 21 | சனி | சப்32-10 | திரு1-0 | சித்60 | யாத்திரை செய்ய |
| 7 | 22 | ஞா | அஷ்29-40 | அவி 1-3<br>சத59-25 | மர1-3சித் | கோவாஷ்டமி, அக்ஷயநவமி<br>தனுராயனம் நா-25-38 |
| 8 | 23 | திங் | நவ25-33 | பூர56-8 | மர56-8சி | ஏற்றம் ஸ்தாபிக்க |
| 9 | 24 | செவ் | தச19-50 | உத்51-15 | அ51-15சி | பீஷ்ம பஞ்சக விரதம் |
| 10 | 25 | புதன் | ஏகா 12-53 | ரே45-28 | மர60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 11 | 26 | வியா | துவா4-53<br>திர56-15 | அஸ்38-48 | அ38-48சி | பிரதோஷம், உத்தான துவாதசி, துளசி வராஹா |
| 12 | 27 | வெள் | சது47-15 | பர31-45 | சித்60 | கி❋ ஆலய அனுஷ்டானம் |
| 13 | 28 | சனி | ○38-30 | கி❋24-48 | அமி60 | ○❋சிவ தீபம், பாஞ்சராத்திரதீபம் கார்த்திகை தீபம் |
| 14 | 29 | ஞா | பிர30-25 | ரோ18-20 | சித்60 | |
| 15 | 30 | திங் | துதி23-15 | மிரு12-43 | அ12-43சி | |
| 16 | 1936௵ டிசம்பர்௴ 1 | செவ் | திரி17-23 | திரு8-23 | மர8-23சி | |
| 17 | 2 | புதன் | சது13-8 | புன5-30 | சித்60 | |
| 18 | 3 | வியா | பஞ்10-50 | பூச4-38 | அ4-38சித் | |
| 19 | 4 | வெள் | சஷ்10-28 | ஆயி5-38 | மர60 | |
| 20 | 5 | சனி | சப்12-13 | மக8-33 | அ8-33சி | |
| 21 | 6 | ஞா | அஷ்15-40 | பூர13-18 | சி13-18அ | |
| 22 | 7 | திங் | நவ20-35 | உத்19-20 | சித்60 | |
| 23 | 8 | செவ் | தச26-33 | அஸ்26-23 | சித்60 | |
| 24 | 9 | புத | ஏகா33-8 | சித்33-53 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 25 | 10 | வியா | து39-38 | சுவா41-30 | அ41-30சி | வாகனமேற [ராஜுக்க |
| 26 | 11 | வெள் | திர45-45 | விசா48-43 | சித்60 | பிரதோஷம், இயமதீப, கதி |
| 27 | 12 | சனி | சது51-25 | அனு55-23 | சித்60 | மாச சிவராத்திரி |
| 28 | 13 | ஞா | அ● 56-13 | கேட்60 | மர60 | சர்வத்திர அமாவாசை, குரு மேற்கே அஸ்தமனம் |
| 29 | 14 | திங் | பிர59-48 | கேட்1-10 | சித்60 | மூலா கார்த்திக நா-56-40 |

| | | | |
|---|---|---|---|
| | | | சே |
| சனி | 1-விரு-புத<br>20-மகர-சுக்<br>20-தனு-புத | | |
| | | | |
| கு-சு ராகு | சூரி | புத | செ |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.